உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருவெண்காட்டடிகள் புராணம்

என்னும்

# பட்டணத்துப்பிள்ளையார் புராணமூலமும்,

சொர்க்கபுரம்

ஸ்ரீமத் இராமலிங்கத்தம்பிரானவர்கள் மாணாக்கராகிய

திருமழிசை

வடிவேலுமுதலியாரவர்கள்

இயற்றிய

விசேடண உதாரணங்களோடுகூடிய

# பொழிப்புரையும்.

திருப்பாதிரிப்புலியூர்ச் சந்நிதிவீதியிலுள்ள

திருக்கைலாயபரம்பரைத் திருக்கோவலூராதீனம்

ஸ்ரீமத் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரியசுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி,

சென்னை நகரத்துச்

சில செந்தமிழ் வித்வசிகாமணிகளால்

பார்வையிடப்பட்டு,

சைவநூலுரைப்பிரசாரணர்

ஸ்ரீ - குமாரவேலாயுத முதலியாரவர்களால்

சென்னை:

கோள்டன் அச்சுக்கூடத்திலும்

டைமண்டு அச்சுக்கூடத்திலும்

பதிப்பிக்கப்பட்டன.

இரண்டாம் பதிப்பு.

1912.

 [விலை ரூபா **1-8-0.**

PRESIDENCY PRESS, MADRAS, E.

உ

சிவமயம்.

# முகவுரை.

"நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு"

எனத் திருவள்ளுவநாயனார் திருவாய்மலர்ந்தவாறு என்றும் வற்றாக் காவிரியென்னும் ஜீவநதியால் நீர்வருவாயுடைமையின் நீர்நாடென்றும், அதனால் விளையும் வளப்பங்கள் யாவு முடைமையின் வளநாடென்றும் எவராலும் புகழப்பெற்று, ஔவைப்பிராட்டியா ரமுதவாக்கினால், "சோறுடைத்து" என்றோதப்பெற்ற சோழநாட்டின்கண்ணுள்ள காவிரிப்பூம்பபட்டினத்தில் அளகையர்கோன் அவதாரராய்த் திருவுருக்கொண்ட திருவெண்காட்டடிகளின் திவ்ய சரிதத்தை, இற்றைக்குச் சற்றேறக்குறைய ஐந்நூறு வருடங்கட்கு முன்னரே, சிதம்பரத்தில் வசித்திருந்த சைவாதீனத் தம்பிரானொருவர் அத் தலவாசிகளாகிய பல பெரியோர்களின் வேண்டுகோட் கிணங்கி, கர்ணபரம்பரையாகத் தாமுணர்ந்துள்ள வரையில் ஞாபகப்படுத்தி ஒருவாறு தொகுத்து முந்நூற்று முப்பத்தாறு செய்யுட்களால் பூர்புகார்ச்சருக்கம் ஆட்கொண்டசருக்கம் துறவறச்சருக்கம் என்னும் மூன்று சருக்கங்களடங்கிய புராண மொன்றியற்றினர். அப் புராணம் அன்றுமுதலின்றுகாறும் இந்நாட்டினும் அத்திருவெண்காட்டடிகளின் அவதார நாடாகிய தென்னாட்டினும் மற்றெந்நாட்டிலும் விசேட மதிப்பாகவே வழங்கிவருகின்றது. இஃதிங்ஙனமாக, ஷை புராணத்தை, மகாகனம்பொருந்திய இயற்றமிழாசிரியர் விசாகப்பெருமாளையரவர்கள் முதன்முறை செவ்வனே அச்சிட்டு வெளிப்படுத்தினர். அப் பதிப்பு செலவாய் வெகுவருடங்க ளானபிறகு, கல்விசாலாச்சிலர் அதை அச்சிடத் தொடங்கிச் செய்யுட்குரிய எழுத்து அசை சீர் தளைமுதலியவற்றைச் சற்றுங் கவனியாமலும் பொருணோக்கமில்லாமலும் பலவாறு ஆபாசப்படுத்தி அச்சிட்டுப் பரவுவித்தார்கள். பிரதமப் பதிப்பு கிடைக்காமையின் இப் பதிப்பை வாங்கத் தொடங்கினோருட் கல்வி சான்றோரும் அச் செய்யுட்களின் பிழைபாடுகளைத் திருத்திப் பொருள்கொள்வ தருமையாயிருந்ததென்னின், ஏனையோர் அச் செய்யுட்களின் பொருளுணரா தலமந்திருந்தார்களென் றறையவும் வேண்டுமோ? இவ்வாறு தெருமரலுறுவாறு திருத்தித் தெளிவான பொழிப்புரையொன் றெழுதி யச்சிட்டு வெளிப்படுத்தின் மிக்க பேருபகாரமாகுமென் றெம்மைப் பலவருடங்களாகப் பலர் பன்முறை கேட்டுக்கொண்டதோடு, இப்போது இப்புராண வுரைப்பதிப்புக்குத் தலைவராகிய ம-ள-ள-ஸ்ரீ. குமாரவேலாயுதமுதலியாரும் யாம் தடுத்துரைத்தற் கேலாதவர்களைக் கொண் டெமக் குரைப்பித்துக் கேட்டுக்கொண்டதால், மேற்குறித்த முதற்பதிப்பையும் அதற்கும் முந்திய ஏட்டுப்பிரதியையும் சேகரித்து, அவற்

றுள்ளும் கவனப்பழுதாலும் பராமரிக்கைக் குறைவாலும் எழுத்துப்பிழைகளாலும் நேர்ந்திருந்த வழுஉக்களைத் திருத்தி, எமது சிற்றறிவிற் கெட்டியவரையில் ஓர் பொழிப்புரையெழுதி, அதற்குரிய விசேடணங்களும் உதாரணங்களும் விளக்கி, ஷை குமரவேலாயுதமுதலியாருக்குக் கொடுக்க, அவர் அச்சிட்டுச் சஞ்சிகைரூபமாய் வெளிப்படுத்தினர்.

இங்ஙனமாக, பெரியோர் பாடல்களிற் பிற்காலத்து நேர்ந்த பிழைபாடுகளைத் திருத்திப் பிரபலப்படுத்துவதே பெரும் புண்ணியமென்றும், நல்லோர் பாடலை நசமாக்கி நவீனப்பாடல் சேர்த்தல் நலமல்லவென்றும் கருதி மனங்கரையாராகிய ஓர் புலவர் அப்புராணபாடல்களுட் சிலவற்றை, நீக்கியும், சிலவற்றைத் திருத்தியும், நூதனப் பாடல்கள் பலவற்றைச் சேர்த்தும், பதவுரையெழுதி, இலக்கணக்குறிப்பு விசேடணம் உதாரணமென்னும் இவற்றுடன் அச்சிட்டுச்சஞ்சிகை ரூபமாய் வெளிப்படுத்தத் தொடங்கி இற்றைக்கு இரண்டு சஞ்சிகைகள் வெளிப்படுத்தினர். எமதபிப்பிராயமாவது சிறந்த மகானாகிய திருவெண்காட்டடிகளைக் குறித்த புராணம் செய்யுள்ரூபமாயிருத்தலானும், அச்செய்யுட்களுள் பலவகைப் பிழைபொதிந்த பதிப்புடையதாயிருத்தலானும், இச்செய்யுட்களை அவ்வப்பாவினங்கட்குரிய எழுத்து சீர் தளை எதுகை மோனை என்னும் இவைகள் பிழையறத் திருத்தி, அப் புராணாசிரியரின் கருத்து வாசிப்போர்க்கு நன்கு விளங்கச்செய்தற் கேற்ற பொழிப்புரை எழுதி, அதற்குரிய விசேடணங்களும் உதாரணங்களும் விரித்துக் காட்டவேண்டுமென்பதே. அவ வபிப்பிராயத்தை எமது புன்புலமைக்குப் பொருந்தியவாறு பூர்த்திசெய்தேம். எம்மினும் மிக்க அறிவுடையோர் இதன்கண்ணுள்ள பிழைகளைப் பொறுத்தல் கடமையாகலானும், எம்மையொத்தோரும் எம்மினிழிந்தோரும் எம்மைக்குறை கூறாராலாகலானும், இதிற் பிழை கூறுவாரிலரென்பதுந்தேற்றமே. முடிவாகக் கூறுமிடத்து, முன்னோர்களாகிய சிறந்த வித்வசிரோமணிகளா லங்கீகரித் தச்சிட்டு வெளிப்படுத்தப்பட்டு வழங்கிவந்த (திருவெண்காட்டடிகள் புராணச்செய்யுட்கள் முழுமைக்கும் உரை வேண்டுவோர், இப் பதிப்பினன்றி அப்பதிப்பினடையார்) இதனை நன்குணர்ந்து பழமை பாராட்டும் பண்பாளரியாவரும் இப்பதிப்பையே நன்கு மதித்துக் கடைப்பிடியாகக்கொண்டு வாங்கி வாசித்துப் பயனடைவார்களென்று நம்புகின்றோம், இங்ஙனம்,

தி. வடிவேலு.

அன்பர்களே !

சஞ்சிகை ரூபமாக வெளியிட்ட முதற்பதிப்பு முற்றுஞ் செலவாய்விட்டமையாலும், பலர் இன்னும் பிரதிகள்வேண்டுமென விரும்புவதாலும், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார்மடம் ஸ்ரீலஸ்ரீ. சிவஷண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய ஸ்வாமிகளும் இப்புராணத்தை இரண்டாமுறை அச்சிட்டால் பலருக்கும் உபயோகப்படும், பெரும் உபகாரமாயிருக்கும் என்று உத்தரவு அளித்தமையாலும், இவ்விரண்டாம்பதிப்பு பதிப்பிக்கலாயிற்று. இதில் 75 - ரூபாய் சிதம்பர நடராஜப் பெருமான் காலை சந்திக்கட்டளைக்கு உபயோகமாக கொடுக்கப்பட்டன.

S. R. குமாரவேலாயுத முதலியார்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருவெண்காட்டடிகளென்னும்
# பட்டணத்துப்பிள்ளையார்புராண
## மூலமும் - உரையும்.

## பாயிரம்.

### விநாயகர்.

ஒளிமேவுந் தில்லைவனத் தோங்கியகற் பகவனமொன் றுண்டு கண்டாற், றெளிமேவு மானந்த நிருத்தமிடு நினைந்தபடி செல்வஞ் சேர்க்குங், களிமேவுந் தும்பிமுகக் கனிகாட்டும் விண்ணுறைகற் பகமே போலு, மளிமேவும் பட்டணத்துப் பிள்ளைபுரா ணம்பகர் தற் களிக்கு மன்றே.

(இதன்பதப்பொருள்.) ஒளிமேவும் தில்லைவனத்து—விளக்கமமைந்த தில்லைவனமென்னும் திருத்தலத்தில்; ஓங்கிய கற்பகவனம் ஒன்று உண்டு—மிக்கு வளர்ந்த கற்பகச்சோலை யொன்றிருக்கின்றது;கண்டால்—(அச்சோலையைப்) பார்த்தால்; தெளிமேவும்—பிரகாசமுண்டாம்; ஆனந்த நிருத்தமிடும்—பேரின்ப நடனம்புரியும்; நினைந்தபடி செல்வம் சேர்க்கும்—(அவரவர்கள்) எண்ணியவாறு சொர்க்கபதவிகளில் அடைவிக்கும்; களிமேவும்—தேன்பொருந்திய; தும்பி முகக்கனிகாட்டும்—வண்டுகணிறைந்த இடமமைந்தபழத்தையும் காணபிக்கும்; விண்உறை கற்பகமேபோலும்—தேவலோகத்திருக்கும் கற்பக விருட்சத்தையொத்த; அளிமேவும்—கருணைவாய்ந்த; பட்டணத்துப் பிள்ளைபுராணம்—பட்டணத்துப்பிள்ளையாருடைய புராணத்தை; பகர்தற்கு அளிக்கும்—அடியேன் பாடுதற்கு வரமும் பாலிக்கும்—எ-று.

அன்று-ஏ-அசைகள். இப்புராணம் மெய்ஞ்ஞானவொளிபெற்ற திருவெண்காட்டடிகளின் சரிதமாகலானும், மங்கலச்சொற்கள் இருபத்திரண்டனுள் பரிதியென்ப தொன்றாகலானும், அப்பரிதிக்கு ஒளியென்னும் பரியாயப்பெயரொன்றிருத்தலானும், மங்கலப்பொருத்தமும் இப்புராணப்பயனும் அமையும் பொருட்டு, "ஒளி" எனமுதற்றொடங்கினர். அன்றியும் இந்நூலாசிரியர் சிதம்பரமென்னும் திருத்தலத்திலுள்ள பெரியோர் வேண்டுகோட்கிணங்கிப்பாடத் தொடங்கினமையின், அத்தலவிநாயகராகிய கற்பகவிநாயகரைத் துதிப்பான் கருதி, கற்பகமென்னும் சொற்கமைய அக்கடவுளையே ஓர் சோலையாக வுவமித்து, "தில்லைவனத்தோங்கிய கற்பகவனமொன்றுண்டு" எனவும், இச்சோலை ஏனையசோலைகள் போன்று இருண்மூடாமல் ஒளிவீசும் என்பார், "தெளிமேவும்" எனவும், ஏனைய சோலைகள் வெறுமனே காற்றி னியக்கத்தா லசைவது போலாது, தானே இயற்கையாய்க் கண்டார்க்கு ஆனந்தத்தை விளைக்க அ

சையுமென்பார், "ஆனந்த நிருத்தமிடும்" எனவும், மற்றுள்ள சோலைக ளேனைய ராக மிகத்தாழ்ந்திராமல் அதியுன்னதமாயோங்கிச் சொர்க்கலோகமட்டும் வளர்ந்து, தன்மீதூர்வோரை அவ்வுலகத்துள்ள பதவிகளில் அவரவரெண்ணியவாறு சேர்க்கத்தக்கதென்பார், "நினைந்தபடி செல்வம் சேர்க்கும்" எனவும், சோலைகளிற் கனிகள் விளங்குவதுபோன்றே, இச்சோலையினும் தேன் நிறையப்பெற்று வண்டுகள் மொய்த்திருக்கும் கனியுண்டென்பார், "கனிமேவும் தும்பிமுகக்கனிகாட்டும்" எனவும், தேவருலகத்துள்ள கற்பகவிருட்சம் வேண்டுவார் வேண்டியாங்கு வரையாதளிப்பது போன்றே, திருவெண்காட்டடிகளும் தம்மைச் சரணடைந்தோர் விழைந்தனயாவும் விருப்புடனளிக்கும் விரகினரென்பார், "விண்ணுறை கற்பகமேபோலு மனிமேவும் பட்டணத்துப் பிள்ளை" எனவும், மேற்கூறிய கற்பகச்சோலையைக் கண்டவளவில் தெளிவுண்டாதலின், அத்தெளிவைக்கொண்டு இப்புராணத்தைப் பாடவரமும் பாலிக்குமென்பார், "புராணம் பகர்தற்களிக்கும்." எனவும், கூறினர். சிலேடையால் விநாயகர் என்பதற்கேற்க, ஆனந்த நிர்த்தமிடுதலும், அவரவர்வேண்டிய பதவிகளைப் பாலித்தலும், விஸ்வரூபங் கொள்ளுதலும், யானைமுகமுடைமையும் குறிப்பால் விளக்கியவாறு காண்க. இன்னும் பிறநூலாசிரியரும் விநாயகக் கடவுளைத் தத்தமக் கியன்றவாறு யானையாகவும் ஏனையவாகவும் உவமித்திருத்தலை, "உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதியாகத்-தள்ளரியவன்பென்னுந் தொடர்பூட்டி யிடைப்படுத்தித் தறுகட்பாசக்-கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணை யென்னும்-வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைகடீர்ப்பாம்." என்னும் பரஞ்சோதி மாமுனிவர் திருவாக்கானும், "மருப்புநிலவாலென் மலதிமிரம் போக்கும்-கருக்கோடை போக்குமதக் காராற்-றிருப்போரூர், நிம்பத்தின் கீழிருந்து நேயர்க்கு வாழ்வளிக்கும்-கம்பக் கடமா களிறு." என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானுந் தெளிக. (க)

## முருகக்கடவுள்.

மருமகற்கு வழக்கிசைத்து வளையல்விற்று மாணிக்க வணிகராகிக், குருமணிசூழ் நான்மாடக் கூடல்வரு மொருவர்மன்றுட் குனிக்குங் கூத்தர்,பொருண்மகனும் வணிகவுருத் திரசன்மர் பிதா வருளும் பொருள் வளர்த்தா, நிருபதமாம் பொருள்செறித்தெம் மகத்தினினி திருப்பரா லெந்த ஞான்றும்.

(இ-ள்.) (ஒரு செட்டியின்) மருமகனுக்காகத்(தாமேமாமனுகவந்து)வாது கூறி, வளையலைவிற்று, மாணிக்கம்விற்கும் வியாபாரியாகி, சிறந்த இரத்தினங்களினொளி எங்கும் புடைபரந்துள்ள நான்மாடக்கூடல் என்னும் மதுரையின் கணெழுந்தருளிய ஒப்பற்றவரும், வெள்ளியம்பலத்தில் நடனஞ்செய்யும் ஆனந்தத்தாண்டவருமாகிய சிவபிரானுடைய, குணமமைந்த புத்திரராகிய வைசிய குலோற்பவ உருத்திரசன்மரும், தமது பிதாவாகிய சிவபிரான் திருவாய் மலர்ந்த அகப்பொருளை விருத்திசெய்தவருமாகிய முருகக்கடவுள், தமதிரண்டு திருவடிகளாகிய வஸ்துவை, எமது மனத்திற்சேர்த்து எக்காலமும் இனிமையுடன் வீற்றிருந்தருளுவர்—எ-று. ஆல்-அசை.

மாமனுக வழக்குரைத்தமையை, "பண்கொண்ட வேதமுத விடையீறு நாடரிய பரமாம னுகியொரு வணிக - னெண்கொண்ட காணிபொருள் கவர் ஞாதிமாதுலரை யெதிரேறி வென்றபடி யிதுவாந் - தண்கொண்டநேமிவர குணதேவனெய்துபழி தன்னைத்துடைத்தனைய மனவன்-கண்கொண்டுகாண வுயர் சிவலோக மதுரைதனில் வருவித்த காதையினி மொழிவாம்." எனவும், வளையல்விற்றமையை, "வேதந்தனது வடிவென்று விண்ணின் றிழிந்த விமானமறைக்-கீதன் செழியன் றனக்குலவாக் கிழிதந் தளித்த வழியிதுவப்-போதங் கடந்த பொருள் வணிகப் புத்தேண் மாட மணிமறுகு - பாதந்தடவ நடந்து வளை பகர்ந்தபரிசு பகர்கிற்பாம்." எனவும், மாணிக்கம் விற்றமையை, "காழ்கெழு கண்டத் தண்ணல் கௌரியன் மகுடஞ் சூட-வீழ்கதிர் மணிகளீந்த வியப்பிது விடையோன் சென்னி - வாழ்கரு முகிலைப் போக்கி மதுரைமேல் வருணன்விட்ட - வாழ்கடல் வறப்பக் கண்டவாடலைப் பாடல் செய்வாம்." எனவும், மதுரைக்கு நான்மாடக்கூடலென்னுந் திருநாமம்வந்தமையை, "வன்றிறல் வருணன் விட்டமாரியை விலக்க வீசன்-மின்றிகழ் சடையினின்று நீங்கிய மேக நான்கும்-குன்றுபோ னிவந்து நான்கு கூடமாக் கூடலாலே-யன்றுநான் மாடக்கூட லானதான் மதுரை மூதூர்." எனவும், உருத்திரசன்மர் வைசிய குலோற்பவரென்பதையும், அவர் முருகக்கடவுளென்பதையும், "வெருவருஞ் செலவின் வேழ முகத்தனை விதித்த சாபப் - பெருவலிதன்னைச் சாரும் பெற்றியாற் சாபங் கூறு-னருவரை நெஞ்சுபோழ்ந்த வள்ளிலை வடிவேற் செங்கை-முருகனை வணிகர் தம்மின் மூங்கையாகென்றுனிப்பால்." எனவும் வரும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தங்களானும், பிதாவருளும் பொருள் வளர்த்தாரென்பதை, இறையனுரகப்பொருட்கு நக்கீரரருளிய உரையானுந்தெளிக. பிதாவின் குணமமைந்த புத்திரரென்பதை, "கடியவிழ் கடுக்கைவேணித் தாதைபோற் கனற்கண் மீனக் - கொடியனை வேவ நோக்கிக் குறையிரந்தனையான் கற்பிற்-பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த-முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ்செய்வாம்." 'என்னும் மேற்படி புராணத் திருவிருத்தத்தாலுணர்க. அன்றியும் "பொருண்மகன்" என்பதற்குச் செல்வப்புத்திரன் எனினும். உண்மைப் புத்திரன் எனினுமாம். ஆயின் விநாயகர் செல்வப்புத்திரரும் உண்மைப்புத்திருமன்றோவெனின், அற்றன்று, விநாயகர் பிரண வாகாரரூபியாகலின் சிவபிரானுருவமேயன்றி வேறன்று. இதனை, "வெருவருஞ்செலவின் வேழ முகத்தனை விதித்த சாபப்-பெருவலி தன்னைச் சாரும் பெற்றியாற் சாபங் கூறுன்." என மேலேகாட்டிய திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்திற் கண்டுகொள்க. அன்றி வீரபத்திரரையும் சிலர் புத்திரராகக் கூறுகின்றரேயெனின், அஃதுண்மையறியார் கூற்றென்றறவேவிடுக்க. என்னை? வீரபத்திரமூர்த்தம் சிவபிரான் இருபத்தைந்து மூர்த்தங்களு ளொன்றுகலின். இன்னும் வைசியர் குலத்திற்சிவபிரானுக்கு விசேஷ திருவுளமிருந்தமையை விளக்குவான், "மருமகற்கு வழக்கிசைத்து வளையல்விற்று மாணிக்க வணிகராகி." எனவும், தந்தைவழி மைந்தனென்பதை விளக்குவான், "வணிகவுருத்திரசன்மர்." எனவும், வைசியர்க்கழகு வளர்பொருளீட்டல் என்னும் இலக்கணம் உருத்திர

சன்மார்க்கிருந்தமையை விளக்குவான், "பிதாவருளும் பொருள்வளர்த்தார்." எனவும், பொருளைச் சேமித்தற்கிடமாக எனதிதயத்தைக் கொண்டனரென்பார் "இருபதமாம்பொருள் செறித்தெம்மகத்தில்." எனவும், அவ்வாறு சேமித்தோர் அவ்விடத்தைவிட் டகலாராகலின், "இனிதிருப்பரெந்த ஞான்றும்." எனவும் கூறினர். (௨)

சபாநாதர்.

பரஞ்சோதி தருபான்மைப் பதிஞானப் பொதுவகத்தும்
வரஞ்சேரு மமரர்குழாம் வளைந்துளபொன் னம்பலத்தும்
புரஞ்சேருஞ் செழுங்கடக புரியரசி னம்பலத்து
முராஞ்சேரு நடமூன்று முடையபிரா னடிபணிவாம்.

(இ-ள்.) சிவபிரான் திருவருட்டன்மைவாய்ந்த பதிகரணம்பெற்ற அறிவம்பலத்திலும், மேன்மையமைந்த தேவர்கூட்டங்கள் சூழ்ந்திருக்கும் கனகசபையினும், மேன்மாடங்கள் நிறைந்திருக்கும் வளம்பெற்ற திருப்பேரூர் என்னும் க்ஷேத்திரத்தின்கணுள்ள அரசம்பலத்தினும், திருவுளவிழைவுமீக்கூர்ந்த மூன்றுதாண்டவங்களையுமுடைய நடராஜப்பெருமானது திருவடிகளை வணங்குவாம்—எ-று.

சிவபிரான் திருவருளின்றி எவர்க்கும் பதிகரணம் வாய்க்காதென்பதை விளக்குவான், "பரஞ்சோதிதருபான்மைப்பதிஞானம்." எனவும், அத்தகைய அறிவே சிவபிரானுக்கு மிக்கபிரீதியுடைமையின் அதனை முதலினும், சிதம்பரம் பூலோககைலாயமென்னும் திருநாமம்வாய்ந்தமையின், அக்கைலையிற் சூழ்ந்துள்ளதுபோன்றே ஈண்டும் அத்தேவர்கள் சூழ்ந்துள்ளாரென்பதை விளக்குவான், "வரஞ்சேருமமரர் குழாம்வளைந்துளபொன்னம்பலம்." என அதனை இடையினும், திருப்பேரூர் என்னும் க்ஷேத்திரம் மேலைச்சிதம்பரமென்னும் திருநாமம்வாய்ந்ததாகலின், "செழுங்கடகபுரியரசினம்பலத்தும்." எனக் கடையினும் வைத்துக் கூறினர். அன்றியும் சிதம்பரநடனம் தரிசித்தோர்க்கே மெய்ஞ்ஞானமும் மேலைச்சிதம்பரதரிசனமும் அமையுமென்பதைக் குறிப்பிப்பான், சிதம்பரத்தை இடையிற்கூறினர். இதனை, அறம் பொருள் இன்பம் என்னும் வரிசையினும், இடம் பொருள் ஏவல் என்னும் வரிசையினும், சொர்க்கம் மத்தியம் பாதலம் என்னும் வரிசையினும், எவ்வாறு இடையிலுள்ளதே முதலிலுள்ளதற்கும் கடையிலுள்ளதற்கும் காரணமாமோ அவ்வாறே கண்டுகொள்க. இதனானன்றே, "வடுவிலாவையத்து மன்னியமூன்று - ணடுவணதெய்த விருதலையுமெய்தும்." எனப் பெரியோர் கூறியுள்ளார். ஆன்மாக்கள் சகலர் விஞ்ஞானகலர் பிரளயாகலர் என மூவகைப்படுதலின், அவைக்கேற்ப மூவகைத்தாண்டவமியற்றி யாட்கொள்வரென்பதை விளக்குவான், "உரஞ்சேருநடமூன்றுமுடையபிரான்." என்றனர். சிவபிரான் ஆன்மாக்களை மூவகையாக ஆட்கொள்வரென்று பிற ஆன்றோரும் வேறுவகையாற் கூறியிருப்பதை, "வென்றுளே புலன்களைந்தார் மெய்யுணருள்ளந் தோறுஞ் - சென்றுளே யமுத மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக் - குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி - மன்றுளே மாறி யாடு மறைச்சிலம் படிகள் போற்றி." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தாற்றெ

ளிக. அன்றியும்மேற்படிமூன்றுதாண்டவங்களையும் ஆனந்தத்தாண்டவம் பஞ்சகிர்த்திய தாண்டவம் பஞ்சாக்கர தாண்டவம் எனக் கூறுவாருமுளர். இத்தாண்டவபேதங்களில் இத்தலத்திற்குரியது இத்தாண்டவம் என வரையறுத்துக்கூறின், அத்தலத்து ஏனையதாண்டவமும் அதற்குரிய பயனுமின்றென்றுமாகலின் அவற்றை விரிக்காதுவிடுத்தனம். (௫)

### சிவகாமசுந்தரி.

உலகமெலா மீன்றருளி யொருமலைக்கு மகளாகி
யிலகுமயி லிளையோர்க்கு மிபமுகர்க்கும் பாலூட்டு
முலையிளைய கன்னிகையாய் முகிழ்த்தபெருங்கருணையளாந்
தொலைவில்புகழ்ச் சிவகாம சுந்தரிசெந் தாள்பணிவாம்.

(இ-ள்.) உலகத்தின்கணுள்ள ஆன்மவர்க்கங்களனைத்தையும் பெற்றருளி ஒப்பற்ற இமயமலைக்குப் புத்திரியாகி, விளக்கமுள்ள மயில்வாகனமுடைய இளையபிள்ளையாராகிய முருகக்கடவுட்கும் யானைமுகமுள்ளவிநாயகக்கடவுட்கும் அமுதைப்புகட்டுகின்ற தனங்களையுடைய அழகுவாய்ந்த கன்னிப்பருவமுடையவளாகித் திரண்ட பேரருளுடையவளாகிய, அழியாக் கீர்த்தியமைந்த சிவகாமசுந்தரியின் சிவந்த திருவடிகளை வணங்குவாம்—எ-று.

உலகெலாமீன்றவளென்பதை, "உலகமெலா மீன்ற வொருத்திதனப் பாலுண்-டிலகு கவிதை மழையீச-னிலவு,புயமலைப்பாற் பெய்தசுகப்போரியில் வாழ்வானம்-புயமலர்த்தா ளென்முடிக்குப் போது." என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானும், இமயமலைக்குப் புத்திரியென்பதை,' மலையரையன்பொற்பாவை வாணுதலாள் பெண்டிருவை-யுலகறியத் தீவேட்டா னென்னுமது வென்னேடி-யுலகறியத் தீவேளா தொழிந்தனனே லுலகமெலாங்-கலைநவின்ற பொருள்களெலாங் கலங்கிடுங்காண் சாழலோ" என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானும், விநாயகக்கடவுட்கும் முருகக்கடவுட்கும் பாலூட்டும் திருத்தனமுடையாளென்பதை, "சித்தமொருபக்கமயினிற்களிறன் வட்டமுலை நிற்குமெழிலிற்றனது சீர்-மத்தகமெனத்தனிலயிர்த்தொருகரத்தை முடி வைத்துறவுறத்தடவு மான்-முத்தமுலை செப்புவதெனக்களிறு நிற்குமரன்முற்புதல்வர் துய்த்தவமுதா-லத்தலைமை பெற்றனர திற்றிவலை கிட்டினுமெனற்பவுயிர் முத்திபெறுமே" என்னும் சௌந்தரியலகரித் திருவிருத்தத்தானும்,கன்னிகையாய் என்பதை, "பங்கயற்கணரியபரம்பரனுருவேதனக்குரிய படிவமாகி-யிங்கயற்கணகனுலக மெண்ணிறந்த சராசரங்க ளீன்றுந்தாழாக்-கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண் டியன்மகள்போற கோலங்கொண்ட-வங்கயற்கணம்மையிரு பாதப்போ தெப்போது மகத்துள் வைப்பாம்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுந்தெளிக. (௬)

### விநாயகர்.

இருநான்கு மதம்பொழியு மிருள்வேழ மிரிந்தோடத்
திருஞான மதமூன்றும் சிவவேத மகிழ்களிறு
பெருநாத முடிநடிக்கும் பெரியோன்ற னுடனுடிற்
கருஞான மலைதொலைக்குங் கற்பகப்பொற் பதம்பணிவாம்.

(இ-ள்.) கறுத்தமதநீரைப்பொழிகின்ற அஷ்டகஜங்களும் ஓட்டெடுக்குமாறுஅழகிய ஞானங்களென்னும் இரண்டுமதங்களைப்பொழிகின்றதும் மூன்றாவதாகிய மேன்மைமிக்க சாமவேதங் களிகூருகின்றயானையும்,தத்துவங்களின்மேம்பட்ட நாததத்துவத்தின் உச்சியிற்றாண்டவம் புரிகின்ற சிவபெருமானுடனே தம்மையும் தியானிப்பார்களாயின், அவர்களுடைய அஞ்ஞானமென்னும் மலையையழிக்கின்ற வருமாகிய கற்பகவிநாயகரின் பொன்போன்ற திருவடிகளைவணங்குவாம்—எ-று.

ஏனையயானைகளைவற்றினு மேம்பட்டதிக்கஜங்களும்பிளிறிட்டோடத்தக்க ஒலியுடனேசாமவேதமானது சதா துதிக்கும் ஏற்றமுடையாரென விளக்குவான், "இருநான்குமதம்பொழியு மிருள்வேழமிரிந்தோடத் திருஞானமதமூன்றாஞ் சிவவேதமகிழ்களிறு" எனவும், நாதாந்தத்தினடனம் புரியும் சிவபெருமானைத் துதிப்போரும் கணேசரையுந் துதிக்கினன்றி அஞ்ஞானநீங்காரென்பார், "பெருநாதமுடிநடிக்கும் பெரியோன்றனுடனுடின் கருஞானமலைதொலைக்கும்," எனவும் கூறினர். விநாயகருக்குத் திருமுகமாத்திரமே யானையினதுபோன்றதாகலின், இவர்க்குப் பீஜமதமின்றென்றும் ஆகவே இரண்டுமதங்களேயுள்ளன வென்றும் அவ்விரண்டும் பரம் அபரம் என்னும் ஞானங்களிரண்டே யென்றுந்தெளிக. இதனை, "வானுலகு மண்ணுலகு வாழமறை வாழப்-பான்மைதரு சைவநெறி பார்மிசைவிளங்க-ஞானமத வைந்துகர மூன்றுவிழி நால்வா-யானைமுகனைப்பரவி யஞ்சலிசெய்கிற்பாம்" என்னும் உமாபதி சிவாசாரியர் திருவாக்கினுங்காண்க. முதலிற்கூறியவிநாயகர்துதி இடையூறின்றிக்காப்பதற்கும், இங்குக்கூறியது மூத்தபிள்ளையாரென்னு முறைமைக்குமாகக் கொள்க. (௫)

## முருகக்கடவுள்

அருட்சிவனு ருண்மலைக்கும் பலமலைக்கு மதிபதியாய்
மருட்படவா ருயிருண்ணும் வரைவயிறுகிழித்தொழித்துத்
தெருட்புலவர் சிறைமீட்ட சேவகனெஞ் சிறையாய
விருட்படலம் படச்சோதி யெறிக்குமவ னடிபணிவாம்.

(இ-ள்.) திருவருட்கடலாகிய சிவபெருமானுடைய காருண்யமென்னும் பர்வதத்திற்கும், உலகத்தின்கணுள்ள ஏனைய பர்வதங்கட்கும் தலைவராய்மயக்கமுண்டாகும்படி அனேக ஜீவர்களைக் கொன்றுகொண்டிருந்த கிரௌஞ்ச பர்வதத்தின் வயிற்றைக் கிழித்தழித்து, தெளிவமைந்த தேவர்களின் சிறையைமீட்டருளிய வீரனாய், எமது சிறையாகிய அஞ்ஞானக்கூட்டம் கெடும்படி மெய்ஞ்ஞானவொளிவீசுகின்ற முருகக்கடவுளின் திருவடிகளை வணங்குவாம்—

அருட்சிவனு ருண்மலையென்பதற்குச் சிவபெருமான் குமாரக்கடவுளுக்காகப் பாலித்த ஸ்ரீ கந்தகிரியெனினுமாம் பலமலைக்கு மதிபதியாயென்பதை குன்றுதோறாடி எனவும் குறிஞ்சி நிலத்தலைவனெனவும் குமாரக்கடவுட்குவழங்கும் திருநாமங்களானுந் தெளிக. வரைவயிறுகிழித்தொழித்து என்பதை, "கிழியும் படியடர் குன்றெறிந் தோன்கவி கேட்டுருகி-யிழியுங் கவிகற் றிடாதிருப் பீரெரிவாய்நரகக்-குழியுந் துயரும் விடாய்ப்படக் கூற்றுவ னூர்க்குச்செல்லும்,

வழியுந் துயரும் பகரீர் பகரீர் மறந்தவர்க்கே" எனவும், தேவர் சிறைமீட்ட சேவகனென்பதை, "தேங்கிய வண்டத் திமையோர் சிறைவிடச் சிற்றடிக்கே-பூங்கழல் கட்டும்பெருமான் கலாபப் புரவிமிசை- தாங்கி நடப்பமுறிந்தது சூரன் றளந்தனிவேல்-வாங்கி யனுப்பிடக் குன்றங்களெட்டும் வழிவிட்டவே" எனவும் வரும் அருணகிரி நாதரருள்வாக்கானுமறிக. சிவபிரான் திருநோக்கத் தின்கண்ணே அவரருள் விளங்குமாகலானும், அந்நோக்கங்களிற்றோன்றிய பொறிகளே சுப்ரமண்யமாகலானும், அருட்சிவனாருண்மலைக்கு மெனக் கூறினரெனினுமாம். தேவர்க ளனேகரைச்சிறையினீக்கிய கிர்த்தியம் முன்னரே தாம் மேற்கொண்டா ராகலின், அஞ்ஞானக் கூட்டங்களாலாகிய அடியேன் சிறையைமீட்ப தரிதன்றெனவிளக்குவான், "எஞ்சிறையாய விருட்படலம் படச் சோதியெறிக்கும்." என்றார். முற்கூறிய முருகர்துதி பட்டினத்தடிக ளவதரித்த வைசியகுலத்திற்கும் முருகக்கடவுட்குமுள்ள உரிமையைக் காட்டு தற்கும், இங்குக்கூறிய முருகர்துதி இளையபிள்ளையாரென்னும் முறைமை யைக் காட்டுதற்கு மாமென்றுணர்க. (சு)

## திருநந்தி தேவர்.

மருணூல்சொல் லொருகோடி மறுசமயக் கொடும்பேய்கள்
பொருணூல்சொல் பவர்போல்வார் பொய்யாக முடிவித்துத்
தெருணூல்சொல் பரம்பரையார் சிவமுதலென் றுரையாடி
யருணூல்சொல் லருணந்தி யருளாலிங் கருள்பெறுவாம்.

(இ-ள்.) மயக்கமுற்ற சாத்திரங்களைக் கூறுகின்ற ஒருகோடியாக விரிந் திருக்கும் வேறாயுள்ள மதமுடைய குரூரப்பசாசுகளாய், உண்மையான சாத் திரங் கூறுபவர்களையொத்தவர்கள் பொய்யராகும்படி முடித்து, மெய்ஞ்ஞான சாத்திரங்களைக்கூறுகின்ற சந்ததியாரின் மேன்மைமிக்க தலைவர்தாமேயென்று திருவாய் மலர்ந்து, திருவருட்குரிய சிவஞானபோதமென்னும் நூலைத் திரு வாய்மலர்ந்தருளிய திருவருட்கடலான நந்தியெம்பெருமானுடைய கிருபை யினால் இவ்வுலகத்தில் அவரது திருவருளையடைவோம்—எ-று.

சைவசமயத்தைத்தவிர ஏனைய சமயங்கள் மயக்கமுடைய சமயங்களாக லின் அச்சமயங்களிலுழல்வோர் தெளிவடையாரென்பார், "மருணூல்சொல் லொருகோடி மறுசமயக்கொடும்பேய்கள்." என்றார். இதனை, "சமயவாதிகட் த்த மதங்களே-யமைவதாக வரற்றி மலைந்தனர்," என்னும் மணிவாசகப்பிரா ன் மலர் வாக்கானும், "சைவசமய மேசமயஞ் சமயாதீதப் பழம்பொருளைக்-கைவந் திடவேமன்றுள்வெளி காட்டுமிந்தக் கருத்தைவிட்டுப் - பொய்வந்துழ லுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதருஞ்-தெய்வச் சபையைக் காண்பதற் குச் சேரவாருஞ் செகத்தீரே." என்னும் தாயுமானவர் திருவாக்கானும். நந்தி யெம்பெருமானே மெய்ஞ்ஞான சாத்திரங்களைக்கூறிய முதல்வரென்பதை, "வெள்ளி மால்வரை விமலனார் விளம்பிய வேதந் - தெள்ளு மாகம புராணங் கள் செழுங்கலை பிறவு - முள்ள வாறுதேர்ந்துலகெலாம் வழங்கமுன் னுரை த்த-வள்ளலாகிய நந்தியங் குரவனைமதிப்பாம்.' ' என்னும் விநாயகபுராணத் திருவிருத்தத்தானுந்தெளிக. (எ)

## திருஞானசம்பந்தசுவாமிகள்.

மணிவாயாற் றிருமிடற்றான் மலர்க்கரத்தாற் றமிழ்மூன்று
மணியாக்கிப் புனனாடு மருந்தமிழ்நா டெனத்தோன்றுந்
தணியாத திருஞான சம்பந்தர் பதம்பணியும்
பணிவார்தம் பதம்பணியும் பணியெமக்குப் பணியாமே.

(இ-ள்.) அழகிய திருவாக்கினாலும், மேன்மைமிக்க கண்டத்தினாலும், தாமரைமலர்போலும் திருக்கரங்களினாலும், முத்தமிழையும் விளங்கச்செய்த தனால், சோழநாடும் அருமையான பாண்டிநாடென்றுரைக்கும்படி காண்கின்ற, சீர்த்தி குன்றாத திருஞானசம்பந்த சுவாமிகளுடைய திருவடிகளை வணங்கும் அடியார்களது பாதங்களைத் தொழுகின்ற பணிவிடையே நமக்குத் தொழிலாகும்—எ-று. ஏ-அசை.

முத்தமிழ்களாவன:—இயல் இசை நாடகம் என்பன. இம்முத்தமிழ்களுள் முறையே தமது திருவாக்கினால் இயற்றமிழையும், திருக்கண்டத்தால் இசைத்தமிழையும் திருக்கரங்களாற் றாளமொற்றி நாடகத்தமிழையும் விளக்கினாரென்பார், "மணிவாயாற் றிருமிடற்றான் மலர்க்கரத்தாற் றமிழ்மூன்று மணியாக்கி." என்றும், இம் முத்தமிழ்களும் திருஞானசம்பந்த சுவாமிகள் அவதாரத்திற்கு முன்பு தமிழ்நாடாகிய பாண்டிநாட்டிலேயே வழங்கியிருந்தனவென்று விளக்குவான், "புனனாடுமருந்தமிழ்நாடென." என்றும் கூறினர். இதுகுறித்தன்றோ திருஞானசம்பந்த சுவாமிகட்கு முத்தமிழ் விரகர் என மூதியோர்மொழிவர். அன்றியும் சிலேடைவகையால், நீர்வளப்ப மிகுதி கொண்டு புனனாடெனப் பெயர்பெற்ற சோழநாட்டின் நகரமாகிய சீர்காழிப் பதியில் திருஞானசம்பந்த சுவாமிகளவதரித்து இம்முத்தமிழ்களாகிய அமுதத்தை அந்நகரத்தினும் சிவதலங்களாகிய அந்நாட்டின் ஏனையநகரங்களினும் பொழிந்தமையின், "மருந்து அமிழ்நாடென" என்றுரைத்தாரென்னலுமொன்று. திருஞானசம்பந்த சுவாமிகளின் மேம்பாட்டை விளக்குவான், அவர் திருவடிகளை நேரேவணங்க யாம்பாத்திரரல்லோமாகலின், அவர் திருவடிகளைப்பணியும் அடியார்கள் பாதங்களைப் பணிதலே நமக்குப்பணிவிடையாகக்கொள்வோம் என்றார். மேம்பாட்டை விளக்குவதற்காகப் பிற ஆன்றோரும் இவ்வாறுரைத்துள்ளதை, "எழுதரு மறைகடேறா விறைவனை யெல்விற் கங்குற்-பொழுதறு காலத்தென்றும் பூசனை விடாது செய்து-தொழுதகை தலைமே லேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி-யழுதடி யடைந்த வன்ப ரடியவர்க் கடிமை செய்வாம்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தாலுணர்க. (அ)

## திருநாவுக்கரசுசுவாமிகள்.

கல்லோடம் வெவ்விடஞ்சூழ் காசினியி னடக்குமலை
யெல்லாமிங் கிறும்பூதா லின்பமென விளையாடிச்
சொல்லாடிச் சிவகதியைத் துதித்துமதித் தூக்கதித்தார்
பல்லாரும் புகழ்நாவுக் கரசர்பத மலர்பணிவாம்.

(இ-ள்.) கல்லாகியதெப்பமும் கொடியவிடமும் உலகெங்கும் சூழ்ந்து திரிகின்ற மலையென்னும் யானையும் ஆகிய இவையனைத்தும், இவ்விடத்தில் ஆச்சரியமடையும்படி இன்பமாகவே விளையாடிக்கொண்டிருந்து, சிவகதியாகிய சிவபெருமானையே கர்த்தாவாக நிச்சயித்துத் தம்மைச்சரணடைந்த அடியார்கட்கு முபதேசித்துத் தாமும் திருத்தாண்டகங்களால் தோத்திரஞ் செய்து, மேம்பாடுற்றவராய், பலகோடி ஆன்மாக்களும் புகழப்பெற்ற திருநாவுக்கரசு சுவாமிகளின் திருவடித்தாமரைகளை வணங்குவாம்—எ-று.

சமணர்கள் கட்டிவிட்ட கருங்கல்லையே தெப்பமாகக்கொண்டு, "சொற்றுணை வேதியன் சோதி வானவன் - பொற்றுணை திருந்தடி பொருந்தக் கை தொழக் - கற்றுணை பூட்டியோர் கடலிற் பாய்ச்சினு - நற்றுணை யாவது நமச்சிவாயவே" என்னும் முதற்செய்யுளுடைய பதிகத்தையும், யானையை ஏவிய போது, "சுண்ணவெண் சந்தனச் சாந்துஞ் சுடர்த்திங்கட் சூளா மணியும்- வண்ண வுரிவை யுடையும் வளரும் பவள நிறமு - மண்ண லரண்முர ணேறு மகலம் வளாயவரவுந் - திண்ணென் கெடிலப் புனலு முடையா ரொருவர் தமர்நா-மஞ்சுவ தியாதொன்று மில்லையஞ்சவருவது மில்லை." என்னும்முதற் செய்யுளுடைய பதிகத்தையும் திருவாய் மலர்ந்தருளி யாவர்க்கும் ஆச்சரியத்தை விளைவித்தாராகலின், "கல்லோடம் வெவ்விடஞ் சூழ் காசினியி னடக்குமலை யெல்லாமிங் கிறும்பூதாவின்பமென விளையாடி." என்றும், இன்னும் நீற்றறையி லிட்டபோது, "மாசில் வீணையு மாலை மதியமும்." என்ற பதிகமும், அப்பூதிநாயனுர் குமாரர்க்கு நேர்ந்த சர்ப்பவிடந்தணியும்படி, "ஒன்று கொலாமவர் சிந்தை யுயர்வரை."என்றபதிகமும் திருவாய்மலர்ந் திருக்கின்றனரென்பதை விளக்குவான், "எல்லா" மென்றும், சைவசமயிகளேயன்றிச் சமணசமயிகளும் இவர் அற்புதச்செய்கையைக் கண்டுபுகழ்ந்தாராகலின், "பல்லாரும் புகழ்," என்றும் கூறினர். (கூ)

### சுந்தரமூர்த்திசுவாமிகள்.

முதல்வனூர் பரவைவிட முன்னுகர்வா னளித்ததெனு
விதமுதலாம் பரவையமு தினிமைதரத் தானுகர்வான்
றுதிகுலாங் குபேரனையுந் தோழனென வுடையானை
மதனுருத் தூதேவும் வன்றொண்டர் பதம்பணிவாம்.

(இ-ள்) உலகைச்சூழ்ந்த பரவையானது தலைவராகிய சிவபெருமான் முன்னாளில் திருவமுது செய்யும்படி ஆலகாலவிடத்தைக் கொடுத்த தல்லவாவென்று, அப்பரவையென்னும் பெயருடைய பெண்ணினிடத்து, இங்கிதவார்த்தைகள்முதலிய திருவமுதைத் தாமுண்ணும்பொருட்டு, யாவராலும்புகழப்பெற்ற குபேரனையும் தமது தோழனென்றுரைக்கும்படி பெற்றிருக்கும் அச்சிவபிரானையே, மன்மதவேதனையடையாமலே தூதனுப்பிய வன்றொண்டரென்னும் சுந்தரமூர்த்திசுவாமிகளின் திருவடிகளை வணங்குவாம்—எ-று.

பரவையென்னும் பெயருடைய கடல் முன்னாளில் ஆலகாலவிடத்தை யளித்தமையின், அப்பரவையென்னும் பெயருடைய பெண்ணிடத்து இங்கித வார்த்தைமுதலாகிய அமுதைத் தாமுண்ணத் திருவுளங்கொண்டவராய், அப்

பெருமானையே தூதாகவனுப்பித் தமதெண்ணத்தை நிறைவேற்றிக்கொண்டனரென்பது கருத்து. செல்வத்திலுயர்ந்த குபேரனைத் தோழமைகொண்டதற்கேற்பக்கல்வியிற் சிறந்த சுந்தரமூர்த்தி சுவாமிகளையும் தோழனெனக்கொண்டாரென்பது விளங்க, ''துதிகுலாங் குபேரனையுந்தோழனெனவுடையாரை.'' என்றும், பெண்பாற் றூதேவுவோர் மன்மதபாணங்களால் வருந்துகின்றோரேயாகலின், இவரவ்வாறின்றித் தமக்குச் சிவபிரானிட்ட கட்டளையை நிறைவேற்றுவா னேவினரென்பார், ''மதனுருத் தூதேவும்.'' என்றும், கூறினர். செல்வத்திலுயர்ந்த குபேரனைத் தோழமைகொண்டதற் கேற்பக் கல்வியிற்சிறந்த சுந்தரமூர்த்திசுவாமிகளையும் தோழமை கொண்டனரென்பதை, ''அறிந்து செல்வ முடையானு மளகைப்பதியாற்றோழமைகொண்-டுறழ்ந்த கல்வி யுடையானு மொருவன் வேண்டுமெனவிருந்து-துறந்த முனிவர் தொழும்பரவை துணைவாகினைத்தோ ழமைகொண்டான்-சிறந்த வறிவு வடிவமாய்த் திகழு நுதற்கட் பெருமானே.'' எனவும், பரவைபாற்றூதேகினரென்பதை, ''படியிலா நின்பாட்டி லாரூ ரனிவிருப்பன் பரம னென்ப-தடியனேனறிந்தனன்வான் றொழுமீச னினைத்தடுத்தாட்கொண்டு மன்றித்-தொடியுலாமென்கைமட மாதர்பா னினக்காகத் தூது சென்று-மிடியிலா மனைகடொறுமிரந்திட்டு முழன்றமையால் விளங்கு மாறே.'' எனவும்வரும் நால்வர் நான்மணிமாலைத் திருவிருத்தங்களானுந்தெளிக. அன்றியும், ஏனையோரைத் தூதனுப்பின் தாங்களும் மன்மதவாதையுடையோராகலின் தாங்களே யணைதற்கெண்ணுவாரென்றுன்னி மன்மதன் சமீபித்தற்கொண்ணாத சிவபிரானைத் தூதேவினரெனவும், முன்பு பாற்கடலிற்றோன்றிய விடத்தைத் திரட்டிக்கொடுத்த தாமே, அவ்விடமுண்ட சிவபிரானைக்கொண்டே அப்பரவையின் அமுதைநுகர்தற் குன்னினரெனவும் கூறினுமாம். (௧௦)

## மாணிக்கவாசகசுவாமிகள்

நானூற்று மணிக்கோவை நடம்பயிலெம்பெருமாற்குத்
தேனூற்றும் பொன்னிதழித் தெரியலின்மேம்படச்சாத்தி
வானூற்ற முதவுதிரு வாசகம்பே சினர்பாத
மானூற்று விலையாக வணங்குதும்யாம் வணங்குதுமே.

(இ-ள்) நானூறு செய்யுட்களாகிய மணிகளாற்கோத்த ஓர்மாலையை,ஆனந்தத்தாண்டவம் புரியும் எமது நடேசப்பெருமானுக்கு, தேனைச்சொரியும் பொன்னிறமுள்ள கொன்றைமலர்மாலையினும் மேம்பாடமையும்படி தரித்து, மேலாய ஊதியமாகிய முத்தித்திருவைப் பாலிக்கும்படியான திருவாசகத்தையும் திருவாய்மலர்ந்தருளிய மாணிக்கவாசகசுவாமிகள் திருவடிகளை அஞ்ஞானத்தையொழிக்கும் உயர்ந்த மெய்ஞ்ஞானவொளியாக நாம் பணிவோம் பணிவோம்—எ-று. ஏ-அசை.

திருக்கோவையார் செய்யுள்கள் நானூறாகலின், ''நானூற்றுமணிக்கோவை,'' எனவும், சிவபிரானைப்பணிவோர், அவர்க்குரிய பூசனையை நிறைவேற்றி முடிந்தபின் மாலைசாத்துதன் மரபாகலினானும், அப்பெருமான் முதலிலேயே பிரணவாகாரமாய்விளங்கும் பொன்னிறமுள்ள கொன்றைமலர் மாலிகை

யணிந்திருத்தலினானும், "நடம்பயிலெம் பெருமாற்குத்-தேனூற்றும் பொன் னிதழித்தெரியலின்மேம் படச்சாத்தி." எனவும், அவ்வாறு சாத்தியவுடனே துதிக்கவேண்டுதலின், "வானூற்றமுதவுதிரு வாசகம்பேசினர்" எனவும்கூறி னர். அன்றியும் மாணிக்கவாசகசுவாமிகளுக்குரிய மணிவாசகரென்னும் பெய ருக்கேற்பமணியை மாலையாகவும் வாசகத்தைத் துதியாகவும்உவமித்தனரென் னலுமொன்று. மாணிக்கவாசகசுவாமிகள் திருக்கோவையாரும் திருவாசகமும் கூறினரென்பதை, "திருச்சதக முதலாகச் சிறந்ததமி ழறுநூறும்-விரித்தகல னுலுபொருட் கோவையொரு நானூறு-மூரைத்தருளி யதன்பின்ன ருயர்வாத வூரர்மொழி-தரித்தெழுது மம்பலவ ரெழுத்தென்று சாற்றினர்." என்னும் வாதவூர்ப்புராணத் திருவிருத்தத்தாலுந்தெளிக. மானூற்றுவிலையாக என்ப தை மால்நூற்று ஐவில்ஆக எனப்பிரித்துப் பொருள்கொள்க. அன்றியும் மா நூற்று விலையாக என்பதற்கு அநேக நூறுவிலையுள்ளதாக மதித்து எனப்பொ ருள் கூறுவாருமுளர். அவ்வாறுரைப்பது சிறப்பன்மைதெளிக. இன்னும் கனகசபையில் நடனஞ்செய்வோர்க்கு மணிமாலையின்மையும் துதியின்மை யும் பெருங்குறைவாயிருந்தமையுணர்ந்து திருக்கோவையாராகிய மணிமாலை யைத் தரித்துத் திருவாசகமாகிய துதியைக் கூறினரென்னினுமாம். (கக)

தில்லைவாழந்தணர்.

சிரசபா நடம்பயிலுந் திருவாரூ ரொருநாத
ஞருறையா னந்தநட நாதனைநே ராதலினு
லாரணராந் தில்லைவா ழந்தணரென் றெடுத்தோதும்
பேருடைய வேதாந்தப் பெரியோர்தம் பதம்பணிவாம்.

(இ-ள்.) சிறப்பமைந்த பஞ்சாக்கர தாண்டவமியற்றுகின்ற திருவாரூரில் ஒப்பற்ற தலைவராக வீற்றிருக்கும் ஆனந்த நடேசராகியகடவுள், தமக்கொப் பானவர்களாயிருத்தலால் வேதங்களை யுணர்ந்தவர்களாகிய தில்லைவாழந்தண ர்களென்று சிறப்பித்துத் திருவாய்மலர்ந்தருளிய நாமம்வாய்ந்த மறைமுடி போர்ந்த மறையவர்களுடைய திருவடிகளை வணங்குவாம்—எ-று.

பஞ்சாக்கர நடனத்தின்விவரத்தை, "ஆடும் படிகேணல் லம்பலத்தானை யனே-நாடுந் திருவடியி லேநகரங்-கூடு-மகர முதரம் வளர்தோள் சிகரம் - பக ருமுகம் வாமுடியப் பார்." எனவும், "சேர்க்குந் துடிசிகரஞ் சிக்கெனவா வீசு கர-மார்க்கும் யகர மபயகரம்-பார்க்கிலிறைக்-கங்கி நகர மடிக்கீழ் முயலகனார்-தங்கு மகரமது தான்." எனவும், "ஓங்கார மேநற் றிருவாசி யுற்றதனி - னீங் கா வெழுத்தே நிறைசுடரா-மாங்கார-மற்று ரறிவரணி யம்பலத்தா னாடலிது-பெற்றார் பிறப்பற்றார் பின்." எனவும்வரும் உண்மைவிளக்கத் திருவெண்பாக் களாலறிக. தில்லைவாழந்தணர்கள் சிவபிரானைப்போன்றே விருப்பு வெறுப் பற்றவர்களாகலின் "நேராதலினால்." என்றார். இனிச் சிவபிரான் விருப்பு வெறுப்பற்றவரென்பதை, "வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க்-கியாண்டு மிடும்பையில." என்னும் திருக்குறளாலும், அவ்வாறே தில்லைவாழ ந்தணர்களும் விருப்பு வெறுப்பற்றவர்களென்பதை, "கேடு மாக்கமுங் கெட்ட

திருவிஞ-ரோடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்-கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி-வீடும்வேண்டா விறலின் விளங்கினர்.'' என்னும் பெரியபுராணச் செய்யுளானுந்தெளிக. (கஉ)

## சந்தாஞசாரியர்.

கண்ணியமா யாபோதக் கடங்கடத்திக் கணிவித்துத்
தண்ணியமா விருளறுத்துத் தன்னையென்னைத் தந்தனனல்
வெண்ணெய்நல்லூர் மெய்கண்டான் மென்மலர்த்தாண் முடிசூட்டி
யண்ணலந்தே சிகர்மலர்த்தா ளங்கங்கே பணிந்தெழுவாம்.

(இ-ள்.) அடியேனை வருத்திய அஞ்ஞானபோதமாகிய காட்டைத் தாண்டுவித்துக் குறிப்பித்து, குளிர்ந்தகிருபையால் அஞ்ஞானத்தைப்போக்கித் தன்னையும் என்னையும் அறிவித்தவராகிய திருவெண்ணெய்நல்லூரி லவதரித்த மெய்கண்ட தேவரது மிருதுவமைந்த தாமரைமலர்போலும் திருவடிகளைச்சிரசிற்றரித்துக்கொண்டு, பெருமைமிக்க மற்றையாசிரியர்களின் மலர்போன்ற திருவடிகளையும் அவ்வவ் வாசிரியர்களைச் சிந்திக்குந்தோறும் வணங்கியெழுவோம்—எ-று. ஆல்-அசை.

மாயையே துயரங்களனைத்திற்கும் காரணமாகலானும், அம்மாயை பலபடவிரிந்து காடுபோற் படர்வதாகலானும், "கண்ணியமாயாபோதக்கடம்.'' எனவும், காட்டின்க ணலைவோர்க்கு நாட்டின்கணடைதற்குரிய வழிக்கோர் குறிகாட்டுதல்போன்று, ஞானமடையும் மார்க்கத்திற்கேற்ற ஓர்குறிப்பை விளக்கினமையின், "கணிவித்து,'' எனவும், உலகாகாரமாகக் கலந்துநின்ற அறிவை யருளாகாரமாக்கிப் பதியிலக்கணத்தையும் பசுவிலக்கணத்தையும் உணர்த்தினரென்பார், "தன்னையென்னைத்தந்தனன்.'' எனவும், அவ்வாறுபதேசித்த இந்நூலாசிரியரின் குருமரபு மெய்கண்டார் சந்ததியாகலின், "வெண்ணெய்நல்லூர் மெய்கண்டான் மென்மலர்த்தாண்முடிசூட்ட'' எனவும், சந்தாஞசாரியர்க ணல்வராகலின், மேற்கூறிய மெய்கண்டார்நீங்க ஏனைய மறைஞானசம்பந்தர் அருணந்திசிவாசாரியர் உமாபதிசிவாசாரியர் என்னும் மூவரையும் குறிப்பிப்பான், "அண்ணலந்தேசிகர்.'' எனவுங்கூறினர். மாயையே துயரங்கட் கேதுவென்பதை, "பொருளல் லவற்றைப் பொருளென் றுணரு-மருளானு மாணாப் பிறப்பு.'' என்னும் திருக்குறளானும், அம்மாயை பலபடவிரிந்ததென்பதை, "ஆறுகோடிமாயா சத்திகள்-வேறுவேறு தம்மாயைக டொடங்கின.'' என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானுமறிக. (கங)

## காரைக்காலம்மை.

வீயாத மாயவுடல் வெறுப்பினுலோவிமல
ரோயாது பேயுடனுட் டுவந்ததனு லோவிங்குச்
சேயாய வெள்ளிமலை சேர்வதற்கோ தெரியாது
பேயானுள் காரைக்காற் பெண்ணணங்கன் னவட்பணிவாம்.

(இ-ள்.) ஓர்காலத்தினு மழியாத மாயையினுலாகிய இச்சரீரத்தினேர்ந்த அருவருப்பினுலோ, அல்லது, சிவபெருமான் ஒழிவில்லாமல் பேய்களுடனே

நடனஞ்செய்வதை விரும்பியதனுலோ, அல்லது, இவ்வுலகத்தின்கண் அதிதூரமாயிருக்கின்ற கைலைவரையை அடைவதற்காகவோ, இவற்றுள் எதற்காகவென்றும் விளங்கவில்லை. காரைக்காலம்மையார் பேயுருவமடைந்தனர் ஆகலின் அவ்வம்மையாரை வணங்குவாம்—எ-று.

காரைக்காலம்மையார் பேயுருவடைந்தமைக்கு மூன்றுகாரணங்கள் கற்பிக்கினும் முடிவிற்கூறிய காரணமே ஏற்றதாகும். இதனை, "இறவாத வின்பவன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார் - பிறவாமை வேண்டுமீண்டும் பிறப்புண்டேலுன்னையென்று-மறவாமைவேண்டுமின்னும் வேண்டுநான் மகிழ்ந்து பாடி-யறவாநீ யாடும்போதுன் னடியின்கீ ழிருக்கவென்றார்." என்னும் பெரிய புராணத்திருவிருத்தத்தாலுந்தெளிக. (கஎ)

## இயற்பகைநாயனூர்.

வினைமாள வரும்விமலர்வேதியராந் தூர்த்தர்க்கு
மனையாளைக் கொடுத்தவர்தாம் வருநெறியிற் றடைநோக்கி
முனைவாளாற் சுற்றமெலா முற்றுவித்த சேவகனு
மெனையாளுஞ் செட்டிமையா ரியற்பகையாம் பணிவுறவே.

(இ-ள்.) சிவபிரானாகிய பிராமணவேடங்கொண்டவிடபுருடர்க்கு, தமது பத்தினியாரைத்தந்து அவ்வேதியர்வரும் மார்க்கத்தில் தடைநேர்ந்ததைப் பார்த்து, கூறிய தமதுவாளாயுதத்தாற் சுற்றத்தாரனைவரையும் உயிரிழக்கச் செய்தவீரரும், என்னையடிமைகொள்ளும் வைசியகுலோற்பவருமாகிய இயற்பகைநாயனாரை யாம் வணங்கத்தொடங்கினல் நமதுதீவினையொழிதற் கேதுவுண்டாகும்-எ-று.

இயற்பகைநாயனூர் மெய்யடியார் விழைந்தனயாவும் வரையாதளிக்கும் வள்ளலாயிருந்தமையை உலகெங்கும் விளக்குவான்,சிவபெருமானே பிராமணகுலோற்பவரான தூர்த்தவேடராய்வந்து அந்நாயனூர்மனைவியைக்கேட்க,அவ்வாறே கொடுத்தனுப்பி, அவரைத்தடுக்கவந்த சுற்றத்தினரனைவரையும் தமது வாளாயுதத்திற் கிரையாக்கினரென்பது பெரியபுராணச் சரித்திரமாகலின், அவற்றைச்சுருக்கி இந்நூலாசிரியர் இவ்விருத்தத்திற்கூறினர். இப்புராணச் சுருக்கத்தை, "எழிலாருங் காவிரிப்பூம்பட்டினத்து ளியல்வணிகரியற்பகையாரிருவர்தேட-வழலாய பிரான்றூர்த்த மறையோனாகி யாயிழையைத் தரவேண்டி யணையவையன்-கழலாரப் பணிந்துமனைக்கற்பின்மேன்மைக் காதலியைக் கொடுத்தமர்செய் கருத்தால்வந்த-பிழையாருஞ்சுற்றமெலாந் துணித்துமீளப் பிஞ்ஞகனை ரழைத்தருளப் பெற்றுளாரே" என்னும் திருத்தொண்டர்புராணசாரத் திருவிருத்தத்தாலுந்தெளிக. (கஅ)

## மூர்த்திநாயனூர்

அலையாழி விடமருந்து மாலவா யமுதருக்கு
மலையாரங் கிடையாமன் மறுத்தனர்விற் றிடுமேவாருஞ்
சிலையாரக் கரந்தேய்த்துத் திருவருளாற் கரம்வளர்ந்து
தொலையாத செல்வமுறுந் தொண்டரடி முடிமுடிப்பாம்.

(இ-ள்.) அலைகளையுடையபாற்கடலிற்றோன்றிய ஆலகாலவிடமுண்டருளியதிருவாலவா யென்னும்மதுராபுரியின்கண் வீற்றிருக்கும் சோமசுந்தரக்கடவுட்கு,மலைகளில்வளரும் சந்தனம்கிடைக்காவண்ணம்சந்தனக்கட்டைகள்விற்பவர்களும் தடைசெய்தார்கள். அதுகண்டு, சந்தன மிழைக்கும் கல்லிற்பொருந்தும்படி தமது திருக்கரத்தைத்தேய்த்து,அவ்வுறுதிப்பாட்டாலுண்டான சிவபிரான் திருவருட்பெருமிதத்தால் மீண்டும் திருக்கரம் வளரப்பெற்று, அழியாதமுத்திச்செல்வமடைந்த மெய்யடியராகிய மூர்த்திநாயனருடைய திருவடிகளை எமது சிரத்திற்கு மகுடமாக அணிவாம்—எ-று.

ஆலகால விடமுண்டவாயராதலினாலும் அவ்விடம் அமுதமானமையினானும், இவ்விரண்டும் விளங்கச் சொற்சிலேடையாக, "அலையாழி விடமருந்து மாலவாயமுதர்." எனவும், சந்தனமரங்கள் பெரும்பாலும் மலைகளின்மீதே வளர்வதென்பதும், அவற்றுள்ளும் பொதியாசலத்தில் விளைவதேயுயர்ந்ததென்பதும், அப்பொதியைக்கு மலையம்என்னும் பெயருளதென்பதும் விளங்குவான், "மலையாரம். எனவும் கூறினர். இந்நாயனர் இவ்வாறான தொண்டியற்றி யருள் பெற்றனரென்பதை, "வழங்குபுகழ் மதுரைநகர் மூர்த்தியாராம் வணிகர்திரு வாலவாய் மன்னர்சாத்தத் - தழங்குதிர முழங்கைதரத் தேய்த்தவூறுந் தவிர்ந்தமணர் வஞ்சனையுந் தவிரமன்ன - னிழந்தவுயி ரினனாக ஞானநல்க வெழில்வேணி முடியாக விலங்குவேட-முழங்குபுக ழணியாக விரைநீறாக மும்மையுல காண்டருளின் முன்னினாரே"என்னும் திருத்தொண்டர்புராணசாரத் திருவிருத்தத்தானுந்தெளிக. அன்றியும் இந்நாயனர் சடையே முடியாகவும் உருத்திராக்கமே ஆபரணமாகவும் திருவெண்ணீறே கலவைச்சாந்தாகவும் ஆகிய இம்மும்மையாலும் உலகாண்ட மூர்த்தியென்பதைக் குறிப்பின் விளக்குவான், "தொலையாதசெல்வமுறும்." என்றாரென்னலுமொன்று. (கரு)

## அமர்நீதிநாயனர்.

மறைதருகோ வணமொன்றான் மனையாட்டி தனயர்செல்வ
முறைபொருடா முடனேறி முக்கணனார் மிக்கருளா
னிறைதருமக் கட்டளையே நீண்டவிமானமதாக
விறைபுரத்துப் போந்திருந்தா ரிணையடித்தா மரைபணிவாம்.

(இ-ள்.) மறைந்துபோனவோர்கோவணத்தின் பொருட்டாகத்தமது பத்தினியார் புத்திரர்கள் திரவியம் வரிசையாயுள்ள ஆபரணாதிகள் என்னும் இவற்றுடனேதாமுந் துலையிலேறி, திரிநேத்திரங்களையுடைய சிவபிரானதுவிசேடித்த திருவருளினாலே, சரிப்பட்டுநின்ற அத்துலாக்கோலே நெடிய விமானமாகவிளங்க, அதன்மீதூர்ந்து சிவபுரத்திற்குச்சென்று வீற்றிருந்த அமர்நீதிநாயனருடைய தாமரைமலர்போலும் இரண்டு திருவடிகளையும் வணங்குவாம்.

மறைதருகோவணம் என்பதற்கு வேதமாகிய கோவணமென்னினும் அமையும். அன்றியும்,"என்னப்பனெம்பிரா னெல்லார்க்குந்தானீசன் - றுன்னம்பெய் கோவணமாக் கொள்ளுமது வென்னேடீ-மன்னுகலை துன்னு பொருண் மறைநான்கே வான்சரடாத் - தன்னையே கோவணமாச் சாத்தி

னன்காண் சாழலோ." என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானுமறிக. நிறைதருமக் கட்டளை என்பதற்கு-நிரம்பிய புண்ணியமென்கின்ற கட்டளையே விமானமாயிற்றென்னினுமாம். புண்ணியபாவங்களுக்குக் கட்டளையென்று ஆன்றோ ருபயோகித்திருப்பதை, "பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தம்-கருமமே கட்டளைக் கல்." என்னும் திருக்குறளானுந்தெளிக. இந்நாயனார் மேற்கூறியவாறு துலாக்கோலில் தம்முடைய பெண்டுபிள்ளை பண்டபதார்த்தங்களென்னும் இவைகளுடன் ஏறினரென்பதையும், அத்துலாக்கோலே விமானமாயிற்றென்பதையும், "பழையாறை வணிகரமர் நீதியார்பாற் பரவு சிறு முனிவடிவாய்ப் பயிலுநல்லூர்க்-குழைகாதர் வந்தொருகோ வணத்தை வைத்துக் கொடுத்ததனை யெடுத்தொளித்துக் குளித்துவந்து-தொழிலாரு மதுவேண்டி வெகுண்டுநீரித் துலையிலிடுங்கோவணநேர் தூக்குமென்ன-வெழிலாரும் பொன்மனைவி யிளஞ்சேயேற்றி யேறினர்வா னுலகுதொழ வேறினாரே." என்னும் திருத்தொண்டர் புராணசாரத் திருவிருத்தத்தானுந்தெளிக.

## கலிக்கம்பநாயனார்

ஐய்ம்மேவு மடியார்முன் னரனடியா ராகிவர
மெய்ம்மேவுந் திருவடிகள் விளங்குவான் விளக்குதலு
மொய்ம்மேவும் புனல்வாரா மொய்குழலார் கைதடிந்த
கைம்மேவுங் கலிக்கம்பர் கழலிணைகை யாற்றொழுவாம்.

(இ-ள்.) அலங்காரமமைந்த தமது பழைய ஏவலர் சிவபிரானுக் கடியவர் போல்வந்ததால்; அவரது உண்மையான திருவடிகள் ஒளிரும்படி கழுவுதலும், நிறைவுள்ள ஜலத்தைவார்க்காத நெருங்கிய கூந்தலையுடைய மனைவியாரது திருக்கரத்தை வெட்டிய ஒழுக்கம்பொருந்திய கலிக்கம்பநாயனாருடைய இரண்டு திருவடிகளையும் நமதுகரங்களால் வணங்குவாம்—எ-று.

அவ்வடியார் முதலிற் கலிக்கம்பநாயனாரிடத்து ஏவலுக் சமைந்திருந்த காலத்தில் மிக்கஒழுக்கமுடன் இருந்தாரென்பதை விளக்குவான், "ஐய்ம்மேவுமடியார்" என்றும், தமதுமனைவியாரென்னும் பட்சபாதமின்றித் திருத்தொண்டிற் கிடையூறிழைத்த கரத்தை வெட்டினமைகுறித்து, "கைம்மேவுங் கலிக்கம்பர்." என்றுங்கூறினர். இந்நாயனார் இவ்வாறியற்றினரென்பதை, "கடவுளருட்கண்ணார்கள் பயிலுந்தொல்லைக் கடந்தைநகர் வணிகர்கலிக் கம்பரன்பர்க்-கடிமையுற வமுதளிப்பா ரடியானீங்கி யருளுருவா யன்பருட னணையவேத்தி-யிடையிலவ ரடியிணையும் விளக்காநிற்ப விகழ்மனைவி கரகமலி யிரண்டுகையும்-படியில்விழ வெறிந்தவன்செய் பணியுந்தாமே பரிந்துபுரிந் தரனருளே பற்றினாரே." என்னும் திருத்தொண்டர் புராணசாரத் திருவிருத்தத்தானுந் தெளிக. காரைக்காலம்மையார் இயற்பகைநாயனார் மூர்த்திநாயனார் அமர்நீதிநாயனார் கலிக்கம்பநாயனார் என்னும் இவ்வைவரும் வைசியகுலோற்பவர்களாகலின் இந்நூலாசிரியர் இவர்கட்குத் துதிகூறினரென்றறிக. எனவே அறுபான்மூன்று நாயன்மார்களுள் திருவெண்காட்டடிக ளவதரித்த வைசியகுலத் துதித்தோ ரைவரென்று வரையறுத்தனரென்க. இதனை, "அறுவரெவ ரவர்செங்கட் சோழர்புகழ்ச் சோழ-ருரண்மானி யிடங்கழியார் நெடுமா

றர் சேரர், குறுகிலமன் னவரைவர் நாஜிஞ்க முனையர்-கூற்றுவனூர் கழற்சிங்கர் மெய்ப்பொருளை யடிகண், முறைமைவணி கரிலைவர் காரைக்கா லம்மை-மூர்த்திகலிக் கம்பரமர் நீதியயற் பகையார், திறமைபுரி வேளாளர் பதின்மூவர் மூர்க்கர்-செருத்துணையார் வாயிலார் கோட்புலியார்சத்தி.'' என்னும் திருத்தொண்டர் புராணவரலாற்றுத் திருவிருத்தத்தானுமுணர்க. (கஅ)

## பட்டணத்துப்பிள்ளையார்.

அறிவரிய தொருபொருணீ யொன்றினுந்தோன் ருயென்று மடங்கா யென்று, முறுதியுறச் செய்யுள்செய்தா ரஃதுமன்றி யாதியந்தமொன்றி லானைச், சிறியபொது வினின்மறுவொன் றின்றிவிளங் கினையென்றுஞ் செப்பி யிப்பான், முறையினிஃ ததிசயமே விளைக்கும்விளை யாதெனவு மொழிந்தா ரன்றே.

(இ-ள்.) யாவராலும் அறிதற்கரியதாகிய ஒப்பற்ற பரம்பொருளான தேவரீர், வேறெந்தப்பொருளினும் உதிக்கீரென்றும் லயிக்கீரென்றும் நிச்சயமாகுமாறு திருப்பாடலருளினர், அதுவுமல்லாமல் முதலீறென்னும் ஒன்றுமில்லாத சிவபெருமானை, சிற்றம்பலத்திலே குற்றமென்ப தொன்றுமில்லாமல் ஒளிர்கின்றீரென்றும் உரைத்தருளி, அதன்பின்னர், முறைமையாக இதனை யோசிக்குங்கால் இஃது ஆச்சரியத்தையே உண்டாக்கும், ஆயினும் மற்றொருவிதத்தில் ஆச்சரியமுண்டாகாதென்றுந் திருவாய்மலர்ந்தனர்—எ-று. அன்று-ஏ-அசைகள்.

''அறிவரிய தொருபொருணீ,'' என்பதை, பட்டினத்தடிகளருளிய கோயினான் மணிமாலையில், ''இனையனுகிய தனிமுதல் வானவன்-காண்பதற்கரிய நின் கழலும்.'' எனவும், ''அகிலசராசர மனைத்து முதலிய-பொன்னிறக்கடவுளன்னமாகிக்-காண்டிலாதநின் கதிர்நெடுமுடியும்.'' எனவும், ''வானோர்க்கரியாய் மறைகளுக்கெட்டாய்.'' எனவும், ஒன்றினுந் தோன்ரு யொன்றினுமடங்காயென்று-முறுதியுறச் செய்யுள்செய்தாரென்பதை, ஷை நான்மணிமாலையில், சராசரமனைத்து-நின்னிடைத்தோன்றி நின்னிடையடங்குநீ - யொன்றினுந்தோன்ரு யொன்றினு மடங்காய்.'' எனவும், சிறியபொதுவினின் மறுவொன்றின்றி விளங்கினை என்பதை, ஷை நான்மணிமாலையில், ''சிறியபொதுவினின் மறுவின்றி விளங்கி-யேவருங்காணவாடுதி.'' எனவும், ''முறையினிஃததிசயமேவிளைக்கும் விளையாது. என்பதை ஷை நான்மணிமாலையில், ''அதுவெனக்கதிசயம் விளைக்குமன்றே விளையாது.'' எனவும் வரும் பட்டினத்தடிகள் திருவாக்கானுந்தெளிக. என்னை, அகிலசராசரங்களும் தமதுருவாகவுடைய சிவபிரான் சிற்றம்பலத்தி னடனஞ்செய்வது யாவர்க்கும் அதிசயம் விளைக்கு மேனும்,அடியேன் வேறொன்றைச் சிந்திக்குங்கால் அஃதோ ரதிசயமாயெனக்குத் தோன்ருதென்றபடி. அவ்வேறொரு விஷயத்தை அடுத்த செய்யுளிற்காண்க. அகண்ட பரிபூரணராகிய சிவபெருமான் சிற்றம்பலத்தில் நடனஞ்செய்வது ஆச்சரியமென்பதை, ''வேதண்ட மேபுயங்கள் விண்ணே திருமேனி - மூதண்ட கூடமே மோலியாங் - கோதண்ட-மொற்றைமா மேருவுமாபதியார் நின்ருடப்-பற்றுமோ சிற்றம் பலம்'' என்னும் குமரகுருபர சுவாமிகள் திருவாக்கானுமறிக. (கக)

மொழிந்தபடி யறுகோடி யாமென்றெண் ணுரைமேலு முடிவின்மாயை, பொழிந்தபல தத்துவங்களிருட்படலங்கிடப்படுமென் புந்தியுள்ளே, தழைந்திடுநின் சடைமௌலிக் கங்கைநங்கை சிலம்பலம்புந்தடந்தாளோடு, நுழைந்தனையென் றதிசயித்தா ரவரையென்சிந் தையிற்பாட்டி னுழைவித்தேனே.

(இ-ள்.) வாதவூரடிகள் திருவாய்மலர்ந்தவாறு ஆறுகோடி யாமெனத் தொகையுரைத்ததற்கும் மேம்பட்டு அளவுகடந்த மாயையினற்றரப்பட்ட பல தத்துவங்களென்னும் அஞ்ஞானப்படலம் மூடப்பட்டிருக்கும் அடியேனது அறிவினுள்ளே,விசாலித்திருக்கும் தேவரீரது சடைமுடியிலே கங்கைப்பெண்ணுடனும் சிலம்பு ஒலிக்கின்ற விசாலித்த திருவடிகளுடனும் நுழைந்தீர் என்று ஆச்சரியப்பட்டார். அத்தகைய பட்டினத்தடிகளை அடியேனுடைய மனத்தின் கண்ணும் பாடலின் கண்ணும் நுழையும்படி செய்தேன்—எ-று.

"அறுகோடியா மென்றெண்ணுரைமேலுமுடிவின்மாயை" என்பதை "ஆறுகோடி மாயாசத்திகள்-வேறுவேறுதம் மாயைகடொடங்கின,, என்னும் மணிவாசகப்பிரான்மலர்வாக்கானும், பொழிந்த பலதத்துவங்க ளிருட்படலங் கிடப்படுமென் புந்தியுள்ளே - தழைந்திடுநின் சடைமௌலிக் கங்கைநங்கை சிலம்பலம்புந் தடந்தாளோடு நுழைந்தனை, என்பதை, "வளையாது - கல்லினும் வலிதது நல்விதிற்செல்லாது - தான்சிறிதாயினு முள்ளிடை நிரம்ப - வான்பொயச்ச மாயாவாசை-மிடைந்தனகிடப்ப விடம்பெறலருமையி-னவர்கள்வர் வல்லிதிற்புகுந்து - மண்மகன் றிகிரியி னெண்மடங்குசுழற்ற - வாபேுகிடந்த பீடினெஞ்சத்து-நுழைந்தனை புகுந்து தழைந்தநின்சடையுஞ்-செய்யவாயு மையமர்கண்டமு - நெற்றியிற்றிகழ்ந்த வொற்றைநாட்டமு - மெடுத்தபாதமுந் தடுத்தசெங்கையும்-புள்ளியாடையு மொள்ளிதின்விளங்க-நாடகமாடுதிநம்ப." எனப் பட்டினத்தடிகள் தாமருளிய கோயினான்மணிமாலையில் திருவாய்மலர்ந் திருத்தலைக்காண்க. அவ்வளவு பெருமையுடைய பட்டினத்தடிகளை அடியேன் சிந்தையினுஞ் செய்யுளினும் நுழையும்படி செய்ததே எவற்றினும் மேம்பட்ட ஆச்சரியமென்பது கருத்து. (௨0)

## அவையடக்கம்.

ஆனந்தை யெனுங்கணிகை யணியவணி மணிக்கடக மளித்தநாதன், பூநந்துஞ் சடைக்கரந்த வணிகவுரு விலிங்கவுருப் பொருந்து மாபோ, லீனந்த மருகனுகா வெண்காடர் வணிகவுரு விலிங்கமானு, ரியானந்தப் பெரியோர்தம் புகழ்புகழ வென்புன்சொ லின்சொலாமே.

(இ-ள்.) ஆனந்தை என்னும் பெயருடையதாசி தரிப்பதற்காக அழகிய இரத்தினகடகத்தைத் தந்தருளும் சிவபெருமானாகிய, கொன்றை மலர்மாலை விசேடித்த சடையையொளித்துவந்த வைசியருருவமானது சிவலிங்கவுருவமடைவதுபோல, இழிவானது தம் சமீபத்தில் அடையப்பெறாத திருவெண்காட்டடிகளும் வைசியருருவத்தினின்றும் சிவலிங்கவடிவமாயினர். அத்

தகைய மெய்யடியாருடைய கீர்த்தியை அடியேன் துதித்தலால், எனது அற்பச் சொற்களும் மதுரச்சொற்களாகும்—எ-று.

ஆனந்தையென்னும் தாசிக்குச் சிவபெருமான் இரத்தினக்கடக மளித்தமையைக் குறிப்பித்தபடி. இவ்வாறளித்தது காவிரிப்பூம்பட்டினமாகலானும், அக்கால் சிவபிரான்கொண்டருளியது வைசியக்கோலமாகலானும், மீண்டும் சிவபிரான் கரந்தருளிச் சிவலிங்கமாகலானும், காவிரிப்பூம் பட்டினத்தவதரித்த திருவெண்காட்டடிகளின்குலம் வைசியகுலமாகலானும், இவரும் முடிவிற் சிவலிங்கவுருவாகலானும், சிவபிரானைப்போன்ற செயலமைந்த இவ்வன்பர் சரிதமுரைக்கப் பெற்றமையின் எனது புன்சொல்லும் இன்சொல்லாதற்குத் தடை யின்றென்னும் தேற்றத்தால், "என்புன்சொலின் சொலாமே." என்றார். (உக)

வாதனையோ ரிரண்டிமற மன்னுதவ முன்னிழைத்தார் மறங்கணீங்கிப், பேதமைதீர் பட்டினத்துப் பிள்ளையெனு மொருபெரியோர் பிறங்கு ஞானக், காதையினைப் பெரியோர்கள் சொலக்கேட்டிங் கிசைக்கின்றேன் கடன்ஞாலத்து, ளேதமிலான் றொழிலைந்து மாருயிர்கள் புரிவார்க ளென்றல் போலும்.

(இ-ள்) மறப்பு நினைப்பென்னும் இரண்டு வாதனைகளும் ஒழியும்படி நிலைபேறான தவத்தை முற்பிறவியிற் புரிந்தவராய், பாவச்செயல்களொழிந்து அஞ்ஞானம் நிவாரணமாகப்பெற்ற, பட்டினத்துப்பிள்ளையாரென்னும் நிகரற்ற பெரியோருடைய, விளக்கமுற்ற மெய்ஞ்ஞான சரிதத்தை, கடல்சூழ்ந்த உலகத்துள்ள பெரியோர்கள், குற்றமற்றவரான சிவபிரானுடைய பஞ்சகிர்த்தியங்களையும் ஆன்மாக்க ளியற்றுவார்கள் என்பதுபோல, ஞானவான்கள் சொல்லிவரும் கர்ணபரம்பரையைக் கேள்வியுற்று இவ்விடத்தில் யான் கூறுகின்றேன்—எ-று.

வாதனையோ ரிரண்டும் என்பதற்கு ஜனனம் மரணம் என்னும் இரண்டுமெனப் பொருள்கூறினுமாம். என்னை. "உறங்குவதுபோலுஞ் சாக்கா டுறங்கிவிழிப்பதுபோலும் பிறப்பு." என்னும் திருக்குறளுரையானும், அன்றியும் சாக்கிராவஸ்தை சுழுத்தியவஸ்தைஎன வழங்கும் பெயர்களானும் தெளிக. அவ்விரண்டுமே மறப்பு நினைப்பென்பதை, "மறப்பு நினைப்பாகி வருதிரையெந் நாளும்-புறப்படா வின்பப் புணரி." என்னும் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானும், முற்பிறவியிற் றவம்புரிந்தார்க்கே இப்பிறப்பில் இத்தகைய தவம் வாய்க்கு மென்பதை, "தவமுந் தவமுடையார்க் காகு மவமதனை-யஃதிலார் மேற்கொள் வது." என்னும் திருக்குறளானும், சிவபிரானியற்றும் பஞ்சகிர்த்தியங்களைச் சீவர்களு மியற்றுவரென்பதைப் பதிகாரணம்பெற்ற சமயாசாரியர் முதலியோர் திவ்யசரிதங்களானும், "செய்யு நந்தொழி லைந்தொழில் யாமுமச் சிவன தூ வடிவென்றே-யையமற்றுண ராதியா னெனுஞ்செருக் கடைந்துநாடொறுநெஞ்சே-நைவதென்னைநீ பஞ்சகோ சங்களு நாமல வெனுவுண்மை-யையிலா மலகம்மென வுனக்கியான் கழறியுந் தெளியாயே." என்னும் சாந்தலிங்கசுவாமிகள் திருவாக்கானும் "யானெனன தென்னும் செருக்கறுப்பான் வானோர்க்-குயர்ந்த வுலகம் புகும்." என்னும் திருக்குற ளுரையானுந்தெளிக.

வெங்கதிரா யிரம்பரப்பு மாதவனு மளக்கருஞ்சூழ் வியன்ஞாலத்துச், சங்கரன்ற னடியாரைப் புகழ்ந்திடல்பூ சனைபுரித றகவொடாற்றிற், பொங்குநலம் பெறுவரென வாரணவா கமம்புகன்ற பொற்பி னாலும், பங்கமுறு வெண்காடர் சரிதமடி யேனிசைந்து பகர்ந்த வாறே.

(இ-ள்.) உஷ்ணமான ஆயிரங்கிரணங்கள்வீசும் சூரியனும் கடலும் சூழ்கின்ற விசாலித்த இவ்வுலகத்தினிடத்து, சிவபிரான் மெய்யடியாரைத் துதித்தலும் பூசித்தலும் என்னும் இவற்றை முறைமையுடன்புரியின், விசேடித்த நன்மையை யடைவார்களென்று வேதாகமங்கள் விளம்பிய மேன்மையினாலும், பழுதடையாதவராகிய திருவெண்காடருடைய திவ்யசரிதத்தை அடியேன் மனமொருப்பட்டுக் கூறியபடி—எ-று. ஏ-அசை.

சிவபிரா னடியரை மெய்யன்புடன் வழிபடுவோர்க்கு மேம்பாடுற்ற பயனெய்து மென்பதை, "எவரேனுந் தாமாக விலாடத் திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி-யுவராதே யவரவரைக் கண்ட போதி லுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி-யிவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்-கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காணலாமே-" என்னும் திருநாவுக்கரசுசுவாமிகள் திருவாக்கானு முணர்க. எனக்கு அவர் புராணத்தை அடைவுடன் கூறி முடிக்கும் ஆற்றலில்லையேனும், சிவபிரானடியார் திவ்ய சரிதங்களைத் துதிப்போர்க்கு விசேடித்த நன்மை விளையுமென வேதாகமங்கள்கூறிய உறுதியால் மனந்துணிந்துரைக்கலானே னென்பது கருத்து. (உரு)

இன்னுமொரு வகையுவகை வெண்காடர் குலவணிக ரின்புகூர, மனனியநல் லறிஞர்சிலர் பரந்தகதை யிதைத்தொகுத்து வகுத்துக் காட்டு, மென்னவெழிற் புலியூரி லிருங்களுை ரறியுநெறி யிசைத்து ளன்யான், பொன்னவையி னிருத்தமிடு மொருத்தனெடும் புகழாகப் புகல லாலே.

(இ-ள்.) இப்புராணம் பாடுதற்கு இன்னும் ஓர்வித சந்தோடமுண்டு, அதாவது திருவெண்காடரது குலத்திற்றோன்றிய வைசியர்களிலே களிப்புமேம்பட சிலபேருண பெரியோர்கள் சிலர், பலபடவிரிந்து கிடக்கும் பட்டினத்தடிகள் சரிதமாகிய இதனை, தொகையாக்கிப் பிரித்துக்காட்டுவீராக என்று கேட்டுக்கொள்ள, அடியார்புகழனைத்தும் பொன்னம்பலத்திற் றாண்டவம்புரியும் நடராஜப் பெருமானுடைய விசேடபுகழேயாகுமென நூல்கள் முறையிடுதலாலே, இச்சிதம்பரத்தின்கணுள்ள மேற்கூறிய பெரியோர்கள் அறிந்து கொள்வதற்காக யான் கூறினேன்—எ-று.

வாதனையோ ரிரண்டும் என்னும் முதலையுடைய செய்யுளானும், இச்செய்யுளானும் இந்நூலாசிரியர் முதனூலின்றிக் கர்ணபரம்பரையைக் கொண்டே இக்காதையைச் செய்யுள்ரூபமாக இயற்றினரென்பது விளங்குகின்றது. முதனூலின்றியே புராணம் பாடலாமென்பதற்கு நியாயம் வரும் செய்யுளிற் கூறுகின்றனர். (உசு)

புலிமுனியும் பதஞ்சலியு முதலான பெரியோர்தம் புகழ்ப்பு ராண,மிலகியவா மவர்க்குமுனங் கதியடைந்தோ ரளவிலவ ரியற்பு ராணம், பலபலவா மவைபோல வருவனவு மவ்வண்ணம் பகர லா கும், கலைவட நூல் சொல்லிலென்சொல் லாவிடிலென் கதிக்கதை கள் கழறலாமே.

(இ-ள்.) வியாக்கிரபாதர் பதஞ்சலியார் முதலிய பெரியோர்களுடைய புகழ்கூறும் புராணங்கள் மாத்திரமே மிகப்பிரசித்தமாய் விளங்குகின்றன. அவர்கட்கு முன்னே முத்தியடைந்தவர்கள் எண்ணிறந்தவர்களாகும், அப் பெரியோர்களின் இயல்பமைந்த புராணங்கள் பலபலவாகும். அதுபோன்றே இனிவருகின்றவர்களின் சரிதங்களும் அவ்வண்ணமே அளவிறந்தனவென் றே கூறப்படும். ஆதலால் வடமொழிப்புராணம் கூறினுமென்னே? கூறாவிடி னு மென்னே? முத்தியடைந்தோர் சரிதங்களைக் கூறலாகும்—எ-று.

வடமொழிப் புராணங்கள்யாவும் வியாக்கிரபாதர் பதஞ்சலியார்என்னும் இவ்விருமுனிவர் காலந்தொடங்கியே கூறியிருத்தலின், அவர்கள்காலத்திற்கு முன்னிருந்த பெரியோர்க ளனேகராகவும், அவர்கள்சரிதங்கள் அளவிறந்தன வாகவுமிருக்குமென்பதில் எவர்க்கும் ஆட்சேபமின்று. அவ்வளவு சரிதங்களும் வடமொழிப் புராணங்கூறாமையின் பொய்படுமோ? அதுபோலவே வேதவி யாசர் பதினெண்புராணங்களையும் ஏனையோர் உபபுராணங்களையும் இயற்றிய காலத்திற்குப் பின்னர் முத்தியடைந்த பெரியோர்கள் அநேகரென்பதற்கும், அவர்கள் சரிதங்களும் எண்ணிறந்தன வென்பதற்கும் ஐயமென்னே? இன் னும் முத்தியடையவிருப்போர் எத்தனைபெயரோ? அவர்கள் சரிதங்கள் எவ் வளவோ? இவையாவும் வரையறைப்படாமையின், அடியார் சரிதங்கட்கு முதனூல் வடமொழியி லிருக்கவேண்டுமென்ப தவசியமில்லையென்றபடி. அடியார்கள் முற்காலத்தும் பிற்காலத்தும் தொடர்ச்சியாய் வருவரென்பதை, "செப்பரிய பொய்யடிமை யில்லாதார் மெய்யிற் றிருநீறுபூசு முனிவர்களுலகு தன்னி-லப்பாலுமடிச்சார்ந்தா ரிவர்கடமிற்சிலபே ராய்ந்ததமிழ்ப்பேர்சிலபேர் மலையாளர் சிலபேர்-தப்பாத தெலுங்கர் சிலர் மற்றுளதேசத்தோர் தவஞ்செ ய்து பரகதியை யடைந்தவர்கள் சிலபே-ரிப்போது மிருந்தாரை வழிபடுவோர் சிலபே ரினிமேலுந் திருமேனி கொடுவருவோர் சிலரே." என்னும் உமாபதி சிவாசாரியாருளிய திருத்தொண்டர் புராண வரலாற்றுத் திருவிருத்தத்தா னும், வடமொழிக்கணுள்ள புராதனநூல்களே சிறந்தனவென்பதும் தமிழிற் செய்த நூதனநூல்கள் சிறந்தன வல்லவென்பதும் தகுதியன்றென்பதை, "தொன்மையவா மெனுமெவையு நன்றாகா வின்று தோன்றியநூ லெனுமெ வையுந் தீதாகா துணிந்த-நன்மையினர் நலங்கொண்மணி பொதியுமதன் களங்க நவையாகா தெனவுண்மை நயந்திடுவர் நடுவாந்-தன்மையினர் பழமை யழ காராய்ந்து தரிப்பர் தவறுநலம் பொருளின்கட் சார்வாராய்ந் தறித-லின் மையினர் பலர்புகழிலேத்துவரே திலருற்றிகழ்ந்தனரே லிகழ்ந்திடுவர் தமக் கெனவொன் றிலரே," என்னும் சிவப்பிரகாசத் திருவிருத்தத்தானு முணர்க.

மகவான்பட்டினம்படைத்த வண்மைதிரு வெண்காடர் வாழ்ந் தவாய்மை, யகலாம விடைமருத னுங்கவர்பாற் சிறுவனென வடைந்தநேயங், திகழ்ஞான வுபதேசம் வைத்தவருள் திருவிசைப்பாச் செப்புஞ்செப்பம், புகழோங்கு மொற்றியூ ருற்றிலிங்க மானதுவும் புகலலுற்றேன்.

(இ-ள்.) இந்திரன் காவிரிப்பூம்பட்டினத்தை அலங்கரித்த வளப்பமும், திருவெண்காட்டடிகள் அப்பட்டினத்தில் வாழ்ந்துகொண்டிருந்த உண்மையும், திருவிடைமருதூரீசர் அப்பட்டினத்தடிகளிடத்துப் புத்திரராய் நீங்காம லெழுந்தருளிய அன்பும், அவர் அப்பட்டினத்தடிகட்கு விளக்கமுள்ள ஞானோபதேசஞ் செய்தருளிய மார்க்கமும், அப்பட்டினத்தடிகள் திருவிசைப் பாவருளியசெம்மையும், கீர்த்திமிக்க திருவொற்றியூரைப் பட்டினத்தடிகளணுகிச் சிவலிங்கவுருவானதும் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

எனவே, இப்புராணத்துளடங்கிய சரிதங்களைத் தொகுத்துக் கூறிய படி, என்னை; காவிரிப்பூம்பட்டினம்தோன்றியவகை, அங்குத் திருவெண்காடர் இல்லறநடாத்தி வாணிபஞ்செய்தமை, அக்காலத்துத் திருவிடைமருதூரீசரே அவர்க்குப் புத்திரராக அவதரித்தமை, அப்புத்திரர் அவர் பிதாவாகிய பட்டினத்தடிகட்கு ஞானோபதேசஞ்செய்தமை, பட்டினத்தடிகள் அதன் பின் திருவிசைப்பாப்பாடியருளினமை, திருவொற்றியூரைச்சேர்ந்த அப்பட்டினத்தடிகள் சிவலிங்கரூபமானமைஎன்னும் இவற்றைத் தொகுத்து, பூம்புகார்ச்சருக்கம், ஆட்கொண்டசருக்கம், துறவறச்சருக்கம் என்னும் மூன்றுசருக்கங்களாக வகுத்துக் கூறினேனென்றனர். (உசு)

பாயிரம் முற்றிற்று



ஆகத் திருவிருத்தம் - உசு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பூம்புகார்ச்சருக்கம்.

செங்கரங்கால் விழிவதனந் திருநாபி யெண்கமலம் சேர்ந்தா
னேனு, மெங்கடிரு மாலிதய கோகனகங் கோயில்கொண் டங்கிருக்
கும் பொன்மான், பங்கயம்போ னீங்காம லிருக்கின்ற காவிரிப்பூம்
பட்டினத்துப், புகழொரு சற்றுரைக்கே னுருத்திரங்கண் ணரு
மொருமாப் புகன்று ளாரே,

(இ-ள்.) சிவந்த திருக்கரங்களும் திருவடிகளும் திருக்கண்களும் திருமுகமும் திருநாபியும் ஆகிய எட்டுத்தாமரைகளைப் படைத்திருக்கினும், எம்முடைய திருமாலின் இதயதாமரையையே கோயிலாகவமைத்துக்கொண்டு, அவ்விடத்தில் வீற்றிருக்கும் திருமகள், அவ்விதய தாமரையைப்போலவே திருவுளங்கொண்டு ஓர் காலத்தினும் பிரியாமலிருக்கின்ற காவிரிப்பூம்பட்டினத்தின் மேன்மையைக் கடியலூருருத்திரங்கண்ணனாரும் ஒருமா என்னும் குறைந்த எண்ணினளவாகக் கூறியிருக்கின்றாராகலின், யானும் மிகச்சொற்பமாகக் கூறுவேன்—எ-று.

கடியலூருருத்திரங்கண்ணனாரென்பவர் கரிகாற்சோழன்மேற் பட்டினப்பாலைபாடினோர். பட்டினப்பாலை என்பது பத்துப்பாட்டுள் ஒன்பதாவது பாட்டு. இது ௩௱௧ அடிகளையுடையது. திருமாலுக்குக் கரங்களும் அடிகளும் விழிகளும் முகமும் நாபியும் தாமரைமலராகவிருக்கினும், அவ்விடங்களிலெல்லாம் திருமகள் வீற்றிராமல் அவரது மார்பகத்திலேயேவீற்றிருப்பதுபோன்று, அனேக வளப்பமுள்ள நகரங்களிருக்கினும் அவற்றுளொன்றினும் வீற்றிருக்க விரும்பாமல், இக்காவிரிப்பூம் பட்டினத்தையே அத்தகைய இதயதாமரையாகப்பாவித்து வீற்றிருக்கின்றன ளென்பார், "பங்கயம்போனீங்காம லிருக்கின்றகாவிரிப்பூம்பட்டினம்," என்றும், திருமால் சிவபிரானுக்குரிய தேவியாரென்பதை விளக்குவான், "எங்கடிருமால்" என்றும், பேராற்றலுடையோராகிய கடியலூருருத்திரங்கண்ணனாரே காவிரிப்பூம்பட்டினத்துப் புகழென்னும் ஒன்றில் இருபதுகூற்றினுள் ஒன்றாகிய ஒருமாவளவு கூறினரெனின், யானென்னென்று கூறுவேன்? மிகச்சொற்பமாகக் கூறுவேனென்பார், "உருத்திரங் கண்ணருமொருமாப் புகன்றுளார் ஒருசற்றுரைக்கேன்." என்றுங்கூறினர். எனவே, சடியலூருருத்திரங்கண்ணனாபோன்றோர் மிகவிசேடித்துரைத்தமையே அவ்வூர்ப்புகழென்னும் ஓரெண்ணின் இருபதுகூற்றுளொருகூறாமெனின் யான்கூறத்தொடங்குவது மிகவற்பமென்பதிற் சந்தேகமில்லையென்ற

படி. தாங்களுரைத்தவிரிவைச் சுருக்கமாக்கி அவையடக்கம் கூறத்தொடங்கிய பிறஆன்றோரும் ஆங்காங்கு இவ்வாறே யுரைத்திருக்கின்றனர். இதனை, "பதார்த்தகுணஞ் சொல்வதெவன் பார்க்கின்ற வெல்லாம் - பதார்த்தமெனி னீக்கிற் பழியாம்-பதார்த்தமெனக் - கூறுகடற் குள்ளணுவின் கூற்றினவ்வி யத்தத்தோர் - கூறுரைத்த னம்பாருக்குள்." என்னும் தேரையர் திருவாக்கானுந் தெளிக. (க)

பொன்னுலகம் புரந்திருக்கும் புரந்தரன்வாழ் பரிமேதம் புரிந்த கோமா, னன்னைபெரும் பூவுலகி லருஞ்சாயா வனஞ்சேரு மமுதநாதன், றன்னையருச் சனைபுரியத் தினந்தொறும்போய்மீண்டுவருந் தன்மை தீர்ப்பா, னுன்னிநெடுஞ் செங்கோட்டு வள்ளிமலைப் பிட ரேறி யுவந்தான் மன்னோ.

(இ-ள்.) தேவருலகத்தைப் பரிபாலித்துக்கொண் டிருக்கின்றவனும், அவ்வாழ்வை யடைவதற்காக நூறு அசுவமேதம்புரிந்த தலைவனுமாகிய இந்திரன், தனதுமாதா தினந்தோறும் பெருமையமைந்த நிலவுலகத்துள்ள அருமையான சாயாவனத்தில் வீற்றிருக்கும் அமுதேச்சுரரைப் பூசிப்பதற்காகப் போய்வருகின்ற நிலைமையை ஒழிப்பதற்கெண்ணி, நீண்ட வள்ளிமலையின் செவ்விதாகிய சிகரத்தின் உச்சியிலேறிக் களித்தனன்—எ-று.

இந்திரன் நூறு அசுவமேதங்களியற்றினவனென்பதை, "நூற்றுப்பத்தடுக்கிய நாட்டத்து நூறுபல் - வேள்வி முற்றிய வென்றடு கொற்றத்-தீரிரண்டேந்திய மருப்பி னெழினடைத் - தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை-யெருத்தமேறிய திருக்கிளர் செல்வனும்." என்னும் திருமுருகாற்றுப் படையானுந்தெளிக. (உ)

வந்துசிவக் குறிசெறியு மிடமுதலாச் சேடன்முடி மட்டுந் தொட்டா, னந்தமுடி மணிச்சாயை யெவ்வயினு மெறிப்பவறிந் தலைதாற்றுமற் சந்ததமுந் தாழைமணங் கமழ்சோலை வளநாடுதழுவுங் கோயிற், றந்திடவுன் னினன்முன்போ லாயிரந்தா மரைபுரையுந் தடங்கணனே.

(இ-ள்.) ஆயிரம் தாமரைகள் மலர்ந்திருப்பதுபோன்ற விசாலித்த கண்களையுடைய இந்திரன் அவ்விடத்திற்குவந்து, சிவலிங்கப்பெருமான்எழுந்தருளியிருக்கும் ஸ்தானம்முதல் ஆதிசேடனுடைய முடிகளுள்ள நாகலோகம்வரையிற்றோண்டினன். அவ்வாறான ஆதிசேடனது ஆயிரம் பணாமுடிகளினுமுள்ள மாணிக்கங்களின் சாயையானது எவ்விடங்களினும் வீசுதலால்,அதனையுணர்ந்த இந்திரன், அவ்வொளிக்குச் சகியாதவனாய்,சதா தாழைமலரின்மணமானது பரிமளிக்கின்ற சோலைகள்சூழ்ந்த வளப்பமுள்ள நாகலோகம்வரையிலாழ்ந்திருக்கும் அவ்வாலயத்தை முன்போலவே அமைப்பதற்கெண்ணினன்—எ-று.

எனவே நாகலோகம்வரையில் அவ்வாலயத்தைப் பெயர்த்துப்பார்த்த இந்திரனுக்கு, ஆங்குள்ள நவமணிகளினொளி கண்ணொளியை மழுங்கச்செய்தமையின், அதன்மேலும் பெயர்க்க வலியற்றவனாய், அவ்வளவில்நிறுத்தித்

தான் தோண்டியவரையில் மீண்டும் பழையபடியேபுதுக்கி அவ்வாலயத்தை நிலைநிறுத்தற் கெண்ணினனென்றபடி. (௩)

அவ்வேலை ம விமலை புறத்தோடிக் கூகூவென்றமலை காட்டச், செவ்வேளின் றிருமிலிங்க நாயகனன் னவனெடுத்தல் செய்யா வண்ண, மெய்வ்வாழுங்கருணைசெய்து முன்போலச்சினகரச் சீர்விளங் கச்செய்தா, னிவ்வேயி னிளந்தோளி கூவென்ற மென்மொழியா ளெனும்பே ருற்றாள்.

(இ-ள்) அத்தருணத்து இமாசலபுத்திரியாராகிய உமாதேவியார் வெளியிலேயோடி கூகூவென்று தொனியெழுப்ப முருகக் கடவுளையீன்றருளிய சிவலிங்கப்பெருமான். அவ்விந்திரன் தம்மைப் பெயர்க்காதபடி, உண்மை நிறைந்த தமது திருவருளைப்பாலித்து, பழையபடியே அவ்வாலயக் கீர்த்தி விளங்குமாறியற்றினர். இவ்விடத்தெழுந்தருளிய இளமையுடையமூங்கிலைப் போன்ற தோள்களைப்படைத்த உமாதேவியார், கூவென்ற மென்மொழியா ளென்னும் திருநாமமுற்றனர்—எ-று.

எனவே, வள்ளிமலைக்கருகிலுள்ளது சாயாவனமென்பதும், சிவபிரான் திருவருளன்றி எச்சீவர்க்கும் எத்தொழிலு மியலாவென்பதும், இந்திரன் அக்கோயிலைத் தோண்டியகாலத்து அச்சமுற்றாள்போன்று கூகூவெனக் கூவிய காரணத்தால், அன்றுதொட்டு அவ்வம்மையார்க்குக் கூவென்றமென்மொழியாளென்னும் திருநாமம் வழங்கியதென்பதும் விளங்குமாறறிக. (௪)

வாசவன்சா யாவனத்து னிறைபூசை நிறைவேற மகிழ்ந்தெஞ் ஞான்று, நேசமுற வுலகினுள்ள வணிகரெல்லாங் குடிதழைப்ப நெடிதழைத்தான், காசினிசூழ் சோணாட்டிற் காவிரிப்பூம்பட்டின ப்பேர் கண்டான் மண்டுந், தேசுதரு நாற்பத்தெண் ணாயிரநற்குடி விரவச் செய்தா னன்றே.

(இ-ள்.) அவ்வாறியற்றிய இந்திரன்களித்து, சாயாவனத்தின்கணெழுந்தருளி யிருக்கும் சிவபிரானுடைய பூசை தினந்தோறும் நிறைவேறவும், நிலவுலகத்துள்ள வைசியர் குடிகள்யாவும் அப்பிரானிடத்தி லன்படையவும், அதனல் விர்த்தியாகவும், உலகத்தாரனைவரும் சூழ்ந்திருக்கப்பட்ட சோழநாட்டிலிருந்த மிக்கவிளக்கமுள்ள மேம்பாடுற்ற நாற்பத்தெண்ணாயிரம் குடிகளையும் வரவழைத்து அவ்விடத்திற் பரவும்படிசெய்து, அதற்குக் காவிரிப்பூம்பட்டினம் என்னும் பெயரும் தரித்தனன்—எ-று.

சாயாவனமென்னும் அத்தலத்தின்கணுள்ள சிவபிரானுக்கு நித்திய நைமித்திகங்க ணிறைவேறுவதற்காக, சோழநாட்டின் கணிருந்த நாற்பத்தெண்ணாயிரங் குடிகளின் கிளைகளைவரவழைத்துக் குடியேற்றினனென்பதால், அதுகாறும் அவ்வாலயம் தேவர்களாற் பூசிக்கப்பட்டதெனவும் அன்றுமுதல்மானவபூசையாயிற்றெனவும் விளங்குதல்காண்க. சோழநாட்டில் நாற்பத்தெண்ணாயிரங் குடிகளுண்டென்பதை, "நாடெங்குஞ் சோழன்முனந்தெரிந்தே யேற்று

கற்குடிநாற் பத்தெண்ணா யிரத்துவந்த" என்னும் திருத்தொண்டர் புராண வரலாற்றுத் திருவிருத்தத்தானுந் தெளிக (ரு)

குடிவிரவச் செய்ததுஞ்சா யாவனத்துக் கொழும்பவளக் குன்றுக் கென்றும், படிபுகழும் பெரும்பூசை போவாம னடாத்திவிடும் பண்பு மன்றி, யடிகளுறை பல்லவனீச் சரமுதலா மாலயமு மவ்வா றாகி, நெடிதுவிளங் கிடும்பொருட்டா மென்பரின்ப நூல்பலவு நிரப்பினோரே.

(இ-ள்.) இந்திரன் அவ்வாறு குடியேற்றுவித்ததும், சாயாவனத்தி லெழுந்தருளும் ஒளியுள்ள பவளமலைபோலும் சிவபிரானுக்கு, எக்காலமும் உலகத்தார் புகழத்தக்க பெருமைவாய்ந்த பூசனையைத் தவறாமல் நடத்திவரும் தன்மைக்காகவும், அல்லாமலும், அச்சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் திருப்பல்லவனீச்சரம்முதலாகிய கோயில்களினும் அவ்வண்ணமே பூசைமுதலியவை விசேடமாய் விர்த்தியாகவுமேயென்று இனிமையான பலநூல்களாராய்ந்துள்ள பெரியோர் கூறுவர்.—எ-று.

சாயாவனமென்னும் முதற்பெயருடைய காவிரிப்பூம் பட்டினத்திற்கருகில் திருப்பல்லவனீச்சரம் முதலிய சிவக்ஷேத்திரங்களினும் அதுகாறும் தேவபூசையேயாயிருந்தமையின், அவைகட்கும் மானவபூசை அன்றுமுதல்தொடங்கினவென்பது விளங்குதலறிக. எனவே, இத்தலங்கட்குத் தேவபூசை ஒவ்வோர் காலங்களினும் மானவபூசை தினந்தோறும் நடத்துவிக்கத் திருவுளங் கொண்டருளிய சிவபெருமான், இந்திரனுக் கிவ்வித எண்ணத்தைத் தோற்றுவித்தனரென்பதுமாம். (சு)

விண்ணவர்கோ மானமைப்பாற் குருலிங்க சங்கமங்கள் விழைந்து நாளுந், தண்ணமரும் பெரும்பூசை யியற்றியிக பரமிரண்டுந் தமக்கே யாக, மண்ணுலகி லிந்நகர மமைத்தவலம்போன் பலிந்த செல்வ மலர்ந்து வாழ்ந்தா, ரெண்ணவரும் வசியதன்மந் தடுமாறு தினிதிருந்தங் கியன்றுளாரே.

(இ-ள்.) தேவேந்திரனுடைய நியமத்தால் குரு லிங்க சங்கம மென்னும் மூவகையினிடத்தும் எக்காலத்தினும் விருப்பமுற்று, குளிர்ச்சியமைந்த மஹாபிஷேகம்முதலிய வழிபாடுகளைப்புரிந்து, இகலோக பரலோக பாக்கியங்களிரண்டும் தங்களுக்கேயுண்டாகும்படி, யாவராலும் மதிக்கத்தகுந்த வைசியகுல ஒழுக்கம் மாறுபடாவண்ணம் அக்காவிரிப்பூம்பட்டினத்தின்கண் வாழ்ந்திருக்கும் அவ்வைசியர்கள், நிலவுலகத்தில் இப்பட்டினத்தையமைத்த இந்திரனைப் போன்று மிக்க ஐஸ்வரியம் பெருகி வாழ்ந்திருந்தார்கள்—எ-று.

ஆசிரியராகவும், சிவலிங்கப்பெருமானாகவும், அடியார்களாகவும், சகளீகரிப்பது சிவமேயாகலின், இம்மூன்றிடத்தும் ஏகபாவனைபொருந்தினல்லது திருவருளடையாவென்பதை விளக்குதற்கு, "குருலிங்கசங்கமங்கள் விழைந்து" என்றார். இதனை, "ஈசனுக் கன்பில்லா ரடியவர்க் கன்பில்லா ரெவ்வு

யிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்-பேசுவதென் னறிவில்லாப் பிணங் களோமிணங்கிற் பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ - யாசையொடு மரணடியா ரடியாரை யடைந்திட் டவர்கரும மூன்கரும மாகச்செய்து-கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.'' என்னும் சிவஞானசித்தித்திருவிருத்தத்தானுந் தெளிக. (எ)

வேறு.

எண்ணியசீ ரறம்பொருளோ டின்பமுறு வணிகர்குழாங்
கண்ணியவீட் டின்பமுமேற் காண்பாரா யினிதமர
வண்ணியபே ரறமுதனன் கடைந்தவராம் வெண்காடர்
புண்ணியனூர் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

(இ-ள்.) அவரவர்கள் கருதிய சிறப்போடுகூடிய அறம் பொருள் இன்பமென்னும் இகலோகார்த்தங்கண் மூன்றையும் அடைகின்ற வைசியத்தொகுதியர், தாங்கள் கருதியவாறு மேம்பாடுற்ற முத்தியின்பத்தையும் இனியடைவோமென்னும் நிச்சயமுடையவர்களாய், இனிமையுடன் வாழ்ந்திருக்கையில்,பொருத்தமாயுள்ள பெருமைமிக்க அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நான்கு புருடார்த்தங்களையும் குறைவற அடைந்தவராகிய திருவெண்காட்டடிகளென்னும் புண்ணியமூர்த்தி திருவவதாரஞ்செய்தருளிய திருப்பதி அழகிய அக் காவிரிப்பூம் பட்டினமேயாகும்.—எ-று.

எவர்கள் இகலோகார்த்தங்களாகிய அறமாதி மூன்றையு மடையப்பெற்றவர்களோ அவர்கள் நான்காவதாகியவீட்டையும் தடையின்றி யடைவார்களென்பது நூற்றுணிபாகலின், ''எண்ணில்சீ ரறம்பொருளோ டின்பமுறு வணிகர்குழாங்-கண்ணியவீட் டின்பமுமேற் காண்பாரா யினிதமர'' என்றார். இதனை, ''ஈதலறந் தீவினைவிட் டீட்டல்பொரு ளெஞ்ஞான்றும்-காத லிருவர் கருத்தொருமித்-தாதரவு-பட்டதே யின்பம் பரனைநினைந் திம்மூன்றும்-விட்டதே பேரின்பவீடு.'' என்னும் ஔவைப்பிராட்டியார் அமுதவாக்கானு மறிக.

கரிகாலன் பெருவளவன் மகள்கேள்வன் கடல்புக்கான்
றிருவேயே யெனவழைத்துத் திரைகரத்தாற் றரக்கொண்டாள்
வரைகேள்வன் கரைநோக்கி வருமளவுங் கல்லானாள்
புரைதீரப் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

(இ-ள்.) வெள்ளத்திற்சென்ற தனதுகணவனை, அக்கடலானது திருமகள்போன்றவனே என்றுகூவித் தனதுகைகளென்னும் அலைகளாற் கொடுக்கப்பெற்றவளாகிய பெருமையமைந்த கரிகாற்சோழனுடையமகளும், தன்னை மணமுடித்தகணவன் சமுத்திரயாத்திரைபோய்க் கடற்கரையைநோக்கி வருமளவும் கல்லுருவாயிருந்தவளும் குற்றமற அவதரித்த நகரமாவது காவிரிப்பூம்பட்டினமாகும்.—எ-று.

காவிரிப்பூம் பட்டினத்திற்பிறந்த கரிகாற்சோழனுடையமகள், தனது கணவனுடன் இல்லறம்நடாத்திக்கொண்டுவருகையில்,ஓர்காற்பெருகியகாவிரி

வெள்ளத்தி லகப்பட்டுக்கொண்டதனது கணவனைப்பிரிந் துயிர்வாழத்தரியாளாய், கடற்கரையிற்சென்று வருந்திக்கொண்டிருந்தனள். அப்போது அவளது கற்பின் மேம்பாட்டைக்கருதிய கடலானது காவிரிவெள்ளம் தன்னிடத்திற் சேர்த்த அம்மாதின் மணலினைத் தனது அலைகளென்னும் கரங்களாலேந்திக் கொண்டுவந்து கரையிற்சேர்த்து, ஒ திருமகள்போல்வாளே! என்றழைத்துக் கொடுக்கப்பெற்றனளென்பதும்,—அந்நகரத்திற்பிறந்த மற்றோர்மாது, தன்னைமணந்தகணவன் கடல்யாத்திரைபோய்த்திரும்புமளவும், தனதுகற்புக்கழிவு நேராவாறு, அக்கற்பின்மேம்பாட்டாற் கல்லுருவம்பெற்று, அவன்திரும்பிவந்தவுடனே அவ்வுருவம்நீங்கித் தனதியற்கையுருவமைந்து அதனுடன் இல்லறம் நடாத்திவந்தனளென்பதும் அந்நகர்ச்சரிதங்களாகலின், அவற்றைவிளக்குவான், "கரிகாலன் பெருவளவன் மகள்கேள்வன்கடல்புக்கான் - திருவேயே யெனவழைத்துத் திரைகரத்தாற் றரக்கொண்டாள்" எனவும், "வரைகேள்வன் கரைநோக்கி வருமளவுங் கல்லானாள்"எனவும் கூறினர். இவ்வாறு சரிதங்களுண்டென்பதை, "உரைசான்ற - மன்னன்கரிகால் வளவன்மகள் வஞ்சிக்கோன்-றன்னைப்புனல்கொள்ளத் தான்புனலின் பின்சென்று-கன்னவிரோளாயோவென்னக்கடல்வந்து - முன்னிறுத்திக் காட்டவவனைத் தழீஇக்கொண்டு-பொன்னங்கொடிபோலப் போந்தாள்" என்றும், "மன்னி-மணன்மலிபூங்கானல் வருகலன்கணோக்கிக் - கணவன்வரக் கல்லுருவம் நீத்தாள்" என்றும் வரும் சிலப்பதிகாரம் வஞ்சினமாலையானுமுணர்க. கரிகாற்சோழனென்பது அச்சோழனுக்குக் காரணப்பெயர். அஃதெவ்வாறெனின், பராந்தகச்சோழனென்பவன் புவனமாதேவியென்பவளை மணந்து அரசாளுகையில், அவனுக்கு மலர் பறித்துக்கொடுப்போனொருவன், ஓர்நாள் சாரமாமுனிவர் நந்தனவனத்துட்புக்குச் செவ்வந்திமலர் பறித்துக்கொடுத்தனன், அம்மலரின் அதியற்புதமணத்தைக் கண்ட சோழன் அம்மலரையே தினமும் பறித்துவரக் கட்டளையிட்டனன். அவனவ்வாறே பறித்துவருவதையுணர்ந்த சாரமாமுனிவர் கரந்திருந்து அவனைப்பிடித்துப்போய் அரசனிடஞ்சேர்த்துத் தண்டிக்கும்படிகூற, அதனை உபேட்சைசெய்த அரசன்மேற் சாரமாமுனிவர் சினந்து சிவபிரானிடமுறையிட்டனர். அம்முறைக்கிரங்கியபெருமான் வாயுதேவனையும் சத்தமேகங்களையும் விளித்து அவ்வரசன் நாட்டில் மண்மாரிபெய்து அழித்துவரக் கட்டளையிட்டனர். அவையவ்வாறே யழிக்கையில் அரசன் கருப்பவதியாயிருந்த தன்றுதேவியை அழைத்துக்கொண்டு குதிரை மீதேறி அதிவேகமாகச் சென்றான். அவ்வேகத்திற் புவனமாதேவி குதிரையினின்றும்தவறிக்காவேரியில்வீழ்ந்தனள். பராந்தகச்சோழன்மாத்திரம் காவிரிவடகரையடைகையில் மண்மாரியாலழிந்தனன், காவிரியில்விழுந்த புவனமாதேவிகரையிலொதுக்கப்பட்டுயிர்பிழைத்துவருவதை அக்கரையி லருந்தவம்புரியும் பிரமமாநிதி என்னும் தபோதனர் கண்ணுற்றுத் தூக்கித் தமதாசிரமத்திற்சேர்த்துப் பரிபாலித்துவருகையிற் கருமுதிர்ந்தோராண்மகவீன்றனள். அக்குழந்தைதன்தாயுடனே அத்தபோதனராச்சிரமத்தில்வளர்ந்து நான்காவது வருடம் பிறந்தது. அப்போது சாரமாமுனிவர் கிருபைகூர்ந்து சோழமண்டலம் பாழ்படாவாறு புரியத் திருவுளங்கொண்டு, முன்புமறைந்து பலவிடங்களிற்சிதறிய மந்திரி பிரதானியர் முதலியவரைக்கூட்டி, பட்டத்துயானைக்குக் கண்கட்டி அதன்துதிக்கையில்

மாலைகொடுத்தனுப்பின் அதுபராக்தகச்சோழன் புதல்வனைக்கொணருமெனக் கூறினர். அதுகேட்ட அவர்களவ்வாறேபுரிய, அவ்யானை அக்குழந்தையைக் கிட்டித் தூக்க அஞ்சுகையில், அச்செய்தியைப் புவனமாதேவியாற் றெளிந்த பிரமமாகிதி என்னும் தவசி, புவனமாதேவியைநோக்கி, கட்டைக்கரியாலிவன் காலிலெழுதுவாயென்றார். அவளதற்கிணங்கி யவ்வாறேபுரிந்தவளவில் யானை தூக்கிக்கொண்டுசெல்ல மந்திரிபிரதானியர் முதலியோர் மகுடாபிஷேகம் செய்வித்தார்கள். கரி காலிற்றீட்டிய காரணத்தாற் கரிகாற்சோழனெனப்பெயர்வந்தது. இதனை, "அந்தண னவ்விடை யணுகு மெல்லையிற்-றந்தியுந் துதிக்காஞ் சலித்து நின்றது-சிந்தையி னுணர்ந்திறை தேவியே கரி-யிந்தன மிவன்பதத் தெழுது கென்றனன்" எனவும், "இறினள் பதத்தினிற் கிரியி-னுச்சியி-னேறிய கதிரென வெடுத்த தொண்கரி - வீரிய மத்தக மிசையிற் றேன்றினான் - றேறினள் சிவஞ்செய லென்று தேவியே" எனவும், "திருநல மறையவர் மலனைச் சிந்தினு - மருமறை யந்தண னுசி கூறினு - னொருகரிக் கோடுகீழிருந்த வுள்ளடி-யிருகரிக் கோடுமே விருக்க வுற்றதே." எனவும், "தழைச்சிலை யின்கரி காலச் சோழனென்-றழைத்தனர் கடமையு மாறி லொன்று கொண்-டொழித்தனன் றுயரெலா முலகம் யாவையும்-பிழைத்தன பகைமையும் பிணிபுமற்றவே." எனவும் வரும் செவ்வந்திப்புராணத் திருவிருத்தங்களாற் றெளிக. (௬)

வன்னிமடைப் பளியோடு சான்றாக வரவழைத்தாள்
பன்னிபுகா விரிமணல்வாய்ப் பாவையைநின் கேள்வனெனுங்
கன்னியர்க ளொடும்போகா திரைகரையா வகைகாத்தாள்
பொன்னனையார் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

(இ-ள்.) வன்னிமரமும் மடைப்பளியும் சாட்சியாக வரவழைத்தவளும், கூறப்பட்ட காவிரிக்கரையிலுள்ள மணலாற்செய்த பாவையை நின்கணவனென்றுரைத்த மாதர்களோடும் போகாதவளாய்த் தனக்கிட்ட திரைச்சீலைக்கு அழிவுவாராமற் காத்தவளுமாகிய திருமகட்கொத்தவர்கள் பிறந்த நகரமாவது காவிரிப்பூம் பட்டினமாகும்—எ-று.

காவிரிப்பூம்பட்டினத்திற் பிறந்த ஓர்மாது இளமையிலேயே மாதா பிதாக்களை இழந்தவளாய், அங்குள்ள ஓர்தேவாலயத்திற் றிருப்பணிசெய்து காலங்கழித்துவருகையில், அவ்வூர்வழியாக யாத்திரைவந்த வேற்றூரானொருவன், அத்தேவாலய தரிசனத்திற்காகச்சென்று தரிசனஞ்செய்து திரும்புகையில், அப்பெண்ணின் ரூபலாவண்யத்தையும் ஒழுக்கத்தையுநோக்கி, அவண்மீது காதல்கொண்டு அவ்வாலயப் பரிசாரகர்முதலியோரால் அவளது விர்த்தாந்தத்தையுணர்ந்து, இவளை எவ்வகையேனும் மணமுடிக்க வேண்டுமென்றும், தனக்கு முன்னுள்ள மனையாட்டிபால் வெகுநாளாகப் புத்திரப்பேறில்லையேயென்றும் கருதி, அங்குள்ளார்க்குத் தன்கருத்தைத்தெரிவிக்க, அவ்வூரவர் வெகுநாளாகத் தக்கமணவாளன் கிடைக்காமையால் வருந்தியுள்ளோராகலின், உடனே அதற்கிணங்கித் தேவாலயத்தின் மடைப்பளிக்கருகிலிருந்த வன்னிவிருட்சத்தினடியில் மணப்பந்தரலங்கரித்து விவாகத்தை முடித்தனர். அதன்பின் அம்மணா

வாளன் தனதுதேவியை அழைத்துக்கொண்டு தன்னூரிற்சேர்ந்து அங்குத் தன்மனையின்கணுள்ள முதன்மனைவியுடனே இச்செய்தியைக்கூற, அவள் இதுகேட்டவுடனே சினந்து, இவள்யாரோ வைப்பாட்டியேயொழிய மணவாட்டியாகாள்; இவள் உள்ளேவரலாகாதென்று மறுத்தனள். அப்போது அக்காவிரிப்பூம் பட்டினத்துப்பெண் மனங்கலங்கி, ஓ சிவபெருமானே ! அடியேன் இதுகாறும் உமக்குத் திருத்தொண்டு புரிந்ததும் கற்பின் நிலைமைதவறுதிருந்ததும் உண்மையாயின், யான்மணம்புரிந்துகொண்ட பந்தற்கருகிலிருந்த வன்னிவிருட்சமும் அதன் சமீபத்திருந்த மடைப்பள்ளியும் ஈண்டுவந்து சான்றுகூறவேண்டுமெனப் பிரார்த்திக்க, அவ்வாறே அவளது கற்பின் மேம்பாடு விளங்குமாறு அவ்வன்னிமரமும் மடைப்பள்ளியும் சான்றுகூறிற்றென்பது, அந்நகர்ச் சரிதமாகலின், அதனைவிளக்குவான், "வன்னிமடைப் பளியோடு சான்றாக வரவழைத்தாள்" எனவும், மேற்படி காவிரிப்பூம்பட்டினத்திற் பிறந்த ஓர்மாதை மணந்தமணவாளன் பொருண்மேற் பிரிதலாகச் சென்றபோது, தன்காதலியைநோக்கி யான்வருமளவும் பிறபுருடரைப் பாராதிருக்குமாறு யான் ஓர்திரையிட்டுப்போவேன்; நீ அதற்குள்ளாகவே யிருந்துகொண்டு தாதியரால் உனக்குவேண்டுவவற்றைப் பெற்றுக்கொண் டிருக்கக்கடவையெனக் கட்டளையிட்டுத் திரைகட்டிப் பாங்கியர்கட்கும் அவ்வாறே கட்டளையிட் டயற்பதிக்கேகினன். அவன்கட்டளைப்படி திரைக்குள்ளிருக்கும் தலைவியின்கற்பைப் பரீட்சிக்கத்தொடங்கிய பாங்கியர்கள், சின்னாட் சென்றபின் ஓர்நாள், காவிரிக்கரையின்கணுள்ள மணலா லோர்பாவையைச்செய்து திரைக்குவெளியில் நிறுத்தி, இதோ உனதுகணவர் வந்திருக்கின்றனர் இப்போது நீ வெளியில் வரலாமென் றழைக்கவும் வெளியில்வராதவளாய் உள்ளிருந்த கற்பின் மேம்பாட்டால், அக்காவிரிவெள்ளம் பெருகியகாலத்தும் அவளிருக்குமிடத்தையழிக்காமல் அதைச்சூழ்ந்துகொண்டு போகும்படிசெய்தாள். அதன்பின் அவள் கணவன் தான்சென்ற அலுவலைமுடித்துக்கொண்டுவந்து பார்க்கையில், காவிரிப்பெருக்கால் மற்றையகட்டடங்கள்யாவும் அழிந்தும் தனதுகாதலியிருந்த கட்டடமாத்திரம் அழியாதிருக்கக்கண்டு அவளது கற்பின்மேம்பாட்டை மெச்சினவனாய்த் தனதுநற்றவத்தை வியந்து முன்னினும் மிக்க பிரியத்துடன் வாழ்ந்தானென்பது அந்நகர்ச் சரிதமாகலின் அதனைவிளக்குவான், "பன்னிய காவிரிமணல்வாய்ப் பாவையைநின் கேள்வனெனும் - கன்னியர்களோடும் போகா டிரைகரையா வகைகாத்தாள்" எனவுங்கூறினர். இச்சரிதங்களுண்டென்பதை, "வன்னிமரமு மடைப்பளியுஞ் சான்றாக - முன்னிறுத்திககாட்டிய மொய்குழலாள்பொன்னிக்கரையின் மணற்பாவைநின் கணவனாமென் - றுரைசெய்த மாதரொடும போகாதிரைவந்-தழியாது சூழ்போக வாங்குந்தி நின்ற வரியா ரகலல்குன்மாதர்" என்னுஞ் சிலப்பதிகாரம் வஞ்சினமாலையானுமுணர்க.

கூவலிற்போய் மாற்றாள் குழவிவிழத் தன்குழவி
யாவலின்வீழ்த் தேற்றெடுத்தா ளயலவரேக் கங்கண்டு
மேவினாள் குரக்குமுகம் வீடுடையோன் வரவிடுத்தாள்
பூவின்மேற் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

(இ-ள்.) தனது சககளத்தியின்குழந்தை கிணற்றில்விழுந்தவுடனே தன் குழந்தையையும் கிணற்றிற்போட்டுவிட்டு இரண்டும்மிதக்க எடுத்தவளும், அயலானொருவனது பார்வையைத் தெளிந்து குரங்குமுகமடைந்தவளாய்த் தன்மனைக்குரியவன்வர அம்முகத்தைவிட்டவளும், இப்பூவுலகத்தின்மீது பிறந்த நகரமாவது காவிரிப்பூம்பட்டினமாகும்:—எ-று.

காவிரிப்பூம் பட்டினத்திற் பிறந்த மற்றோர்வனிதை, தனதுசககளத்தியின்குழந்தை தவறிக் கிணற்றில்விழுந்தவுடனே தன்னையொத்தாள்மகவின்றியிருக்கத்தான்மாத்திரம் குழந்தைவைத்திருக்கலாமோவென்றெண்ணித்தாமதியாமல் தன்குழந்தையையும் அக்கிணற்றிலேயே போட்டுவிட்டனள். அவள்கற்பின் மேம்பாட்டையும் நல்லெண்ணத்தையும் வியந்த கடவுளருளால், இருகுழந்தைகளும் அக்கிணற்றின்மேல் உயிர்பிழைத்து மிதக்கக்கண்டு எடுத்தனளென்பதும், அப்பட்டினத்திற்பிறந்த மற்றோர்மாது தன்கணவன் அயலூர்க்குச் சென்றிருப்பதுணர்ந்த அயலானொருவன் தன்னைநோக்குகின்ற காமப்பார்வையைத்தெளிந்து, தன்கணவன்வருமளவும் தனக்குக்குரங்குமுகம் வரும்படி சிந்தித்துப் பெற்றுக்கொண்டு, கணவன்வந்தவுடனே அம்முகத்தைப்போக்கித் தன்னியற்கைமுகமடைந்தாளென்பதும் அந்நகர்ச் சரிதங்களாகலின், அவற்றைவிளக்குவான், "கூவலிற்போய் மாற்றாள் குழவிவிழத் தன்குழவி-யாவலின்வீழ்த்தேற்றெடுத்தாள்." எனவும், அயலவனோக்கங்கண்டு - மேவினள் குரக்குமுகம் வீடுடையோன் வரவிடுத்தாள்" எனவும்கூறினர். இச்சரிதங்களுண்டென்பதை, "இணையாய - மாற்றாள் குழவிவிழத் தன்குழவியுங் கிணற்று-வீழ்த்தேற்றுக் கொண்டெடுத்த வேற்கண்ணாள் வேற்றொருவ - னீணோக்கங் கண்டு நிறைமதி வாண்முகத்தைத் - தானோர் குரக்குமுக மாகென்று போன-கொழுநன்வரவே குரக்குமுக நீத்த - பழுமணியல்குற்பூம் பாவை." என்னும் சிலப்பதிகாரம் வஞ்சினமாலையினும் காண்க. (கக)

முற்றாத முலையிருவர் முத்துவண்ட லாடிடத்துப்
பெற்றாற்று மாண்பெண் பிறர்மணஞ்செய் யாவண்ணஞ்
சொற்றார்கள் பிறந்தபெண் ணுயகனைத் தலைசுமந்தாள்
பொற்றுமம் பிறந்தபதி பூம்புகார்ப் பட்டினமே.

(இ-ள்.) முதிராத தனங்களையுடைய மகளிர்களிருவர் முத்துக்களைக்கொண்டு வண்டலாட்டயர்கையில், தாமிருவரும் ஆண்பெண் என்னும் இருபான் மகவைப்பெற்றார்களாயின், அவ்விருவர்க்கும் வேறிருவரை மணம்முடிக்காதபடிபேசிக்கொண்டார்கள். அவ்விருவரில் ஒருத்திக்குப் பிறந்தபெண்மற்றொருத்திக்குப் பிறந்தமுடவனாகிய நாயகனைத் தலையிற்சுமந்தாள் அத்தகைய கற்புள்ளபொன்மாலைபிறந்தநகரமாவது காவிரிப்பூம்பட்டினமாகும்.—எ-று.

காவிரிப்பூம்பட்டினத்திற் பிறந்த இரண்டுபெண்கள் சிறுவயதில் முத்துக்களைக்கொண்டு சிற்றில் விளையாடும்போது தம்மிருவருக்கும் ஆண்பெண் என்னும் பாற்பகுதிப்படி மகவுண்டாமாயின், அவ்விருவர்க்குமே மணம்முடிப்போமென்று பேசிக்கொண்டார்கள். பிறகு அவ்விருவர்க்கும் பருவம்வாய்த்து

மணம்முடிந்து புத்திரோற்பத்தியாய்த் தாங்கள் பேசிக்கொண்டவாறே ஆண் பெண் என்னும் இருபாற் பகுதிப்படியேபிறந்தன. ஆயின், அப்புத்திரன் மூடவனாயிருந்தமையைக்கண்ட பெண்மகவீன்றமாது, தனதுகாதலனைநோக்கி, நான்சிறுவயதுடன் வண்டலாட்டயர்கையில் இவ்வாறு பேசிக்கொண்டதுண்டு; இப்போது அப்பிள்ளை மூடமாயிருக்கின்றதேயென்று சிந்தித்து வருந்துகின்றேனென்றுரைக்க, எப்போது நமதுதாய் அவனுக்கென்றுரைத்தாளோ அப்போதே அவர்மனைவி யாயினேமெனச் சிந்தித்தவளாய், சத்தந்தைக் கேட்ட அவள்புத்திரியாகியபெண் சற்றுந் தரியாதவளாகக் கோடியுடையுடுத்திக்கொண்டு கூந்தலைவாரிச்சொகுசாகக் கட்டிச்சென்று அப்புதல்வனைத் தன் தலையிற் சுமந்துநின்றனள் என்பது அந்நகர்ச்சரிதமாகலின், அதனைவிளக்குவான், "முற்றாத மூலையிருவர் முத்துவண்ட லாடிடத்துப்-பெற்றாற்றா மாண் பெண்பிறர்மணஞ்செய் யாவண்ணஞ்-சொற்றார்கள் பிறந்தபெண் ணாயகனைத் தலைசுமந்தாள்" என்றார். இச்சரிதமுண்டென்பதனை, "விழுமிய-பெண்ணறிவென்பது பேதைமைத்தே யென்றுரைத்த-நுண்ணறிவி னோர்நோக்க நோக்காதே - யெண்ணிலேன்-வண்டலயர்விடத்தி யானோர் மகட்பெற்று-லொண்டொடி நீயோர் மகற்பெறிற்கொண்ட-கொழுநனவ ளுக்கென்றி யானுரைத்த மாற்றங் - கெழுமி யவளுரைப்பக் கேட்ட விழுமத்தாற் - சிந்தைநோய்கூருந் திருவிலேற் கென்றெடுத்துத்-தந்தைக்குத் தாயுரைப்பக் கேட்டாளாய்-முந்தியோர்-கோடிக் கலிங்கமுடுத்திக் குழல்கட்டி-நீடித் தலையை வணங்கித் தலைசுமந்த-வாடகப்பூம்பாவை." என்னும்சிலப்பதிகாரம் வஞ்சினமாலையானுமுணர்க.

கன்னிசர்தோட் காளையர்கைக் காசேனுங் கற்புடையே
னென்னுமொரு மனைத்தொழும்பி யேனையர்கற் பாருரைப்பார்
நன்னகரத் தியல்பாற்போ நதியிதெனத் தெற்கேகும்
பொன்னியுடைப் படைத்தவள்வாழ் பூம்புகார்ப் பட்டினமே

(இ-ள்.) மலையையொத்த புயங்களையுடைய அரசகுமாரர்களின் கையினலியும் பொற்காசாயினும் எனதுகற்பையழிக்க மாட்டேனென்று ஓர்வீட்டின் அடிமைத்தொழில் செய்பவள்கூறுவாளாயின், மற்றையருடைய கற்பின்வன்மையை எவர்கூறுவர். சிறந்தநகரத்தி னியல்புக்கேற்கப்பாய்கின்ற நதியிதென்றுரைக்கும்படி தென்றேயங்களிற்செல்லும், காவிரியின் உடைப்பையடைத்த காளி வீற்றிருப்பதும் காவிரிப்பூம்பட்டினமேயாகும்.—எ-று.

உலகத்திற் கற்பிழப்போர் பெரும்பாலும் பொருளிச்சையானாகலானும், அத்தகைய பொருளிச்சை மிகவறியோர்க்கே இன்றியமையாதாகலானும், அத்தகைய வறியோர்களுள்ளும் ஒருவர்வீட்டில் அடிமைத்தொழில் புரிவோரின் மேம்பட்ட வறியோரின்றாகலானும், அந்நிலைமைவாய்ந்த ஓர்மனைத்தொழும்பியும், அரசகுமாரர்க ளீகின்ற பொற்காசுக்கும் எனதுகற்பை யழிக்கேனென்பளாயின், அந்நகரத்துள்ளார் கற்பின் மேம்பாட்டை யாவர்கூறுவரென்றனர். இத்தகைய அந்நகரச் சிறப்புகளனைத்தையும் வடமொழிக் காவிரிப்பூம்பட்டினத்துப் புராணத்திற் பரக்கக்கூறியுள்ளதென முதியோர்மொழிவர். (௧௩)

### வேறு.

புயலோங்குஞ் சையகிரிப் புறத்தில்வண்கா விரிபனகன் புரத்திற் போந்து, வயலோங்குஞ் சோணாட்டு மன்னுயிருண் டின்புறவே மாலுக் கேலு, மியலோங்கு மனையாக விருப்பதற்கோ கடலாடவெண்ணியோ தன், னயலோங்கும் பூம்புகார்ச் சங்கமுகத் துறையாகி யமர்ந்த தன்றே.

(இ-ள்.) மேகமண்டலமளவும் வளர்ந்துள்ள சையகிரிப்புறத்தில் தோன்றும் வளவிய காவிரிநதியானது, ஆதிசேடனுடைய நாகலோகமளவுமாழ்ந்து, வயல்கள் விசேடித்த சோழநாட்டின்கண்வாழும் ஆன்மகோடிகள் புசித்துச் சுகம்பெறுதற்கோ, திருமாலுக்குப் பொருந்திய தன்மைமேம்பட்ட இருப்பிடமாக இருப்பதற்கோ, கடலின்மூழ்குதற்குக் கருதியோ, தனக்கருகில் விளங்குகின்ற காவிரிப்பூம்பட்டினத்திலே சங்கமுகத் துறையாகியிருந்தது.—

காவிரிநதியினுற்பத்தி சையகிரிப்புறத்தாகலின், "புயலோங்குசையகிரிப்புறத்தில்வண்காவிரி" எனவும், அது ஏனையநதிகளினும் மிக்கஆழமுடைத்தாகலின், "பனகன்புரத்திற்போந்து" எனவும், நீர்வளத்தாற் கழனிகளை மிகுதியுமுடையது சோணாடாகலின், "வயலோங்குஞ்சோணாடு" எனவும், சையகிரிப்புறத்துத்தோன்றிய காவிரி ஏனைய இடங்களிற் றங்காது அச்சோணாட்டிலேயே சங்கமுகத்துறையா யமர்ந்ததால், "சோணாட்டு மன்னுயிருண் டின்புறவே" எனவும், அத்துறையிற் சங்கங்கள் மிக்கிருத்தலானும், பால்போன்ற வெண்ணிறமா யிருத்தலானும், "மாலுக்கேலு-மியலோங்கு மனையாக விருப்பதற்கோ" எனவும், அத்துறை அங்குநின்றும்சென்று கடலிற் கலத்தலால், "கடலாடவெண்ணியோ" எனவும் கூறினர். சோணாட்டில் நெல்வயல்கள் விசேடமிருத்தலினன்றே, "வேழமுடைத்து மலைநாடு மேதக்க-சோழவளநாடு சோறுடைத்து-பூழியர்கோன்-றென்னாடு முத்துடைத்து தெண்ணீர் வயற்றொண்டை-நன்னாடு சான்றோருடைத்து." என ஔவைப்பிராட்டியாருமருளினர். இந்நதி சையமால்வரையினின் றுற்பத்தியாமென்பதையும், அக்காவிரியே காவிரிப்பூம்பட்டினத்தை வளப்படுத்துமென்பதையும், "சையமால் வரைபயி றலைமை சான்றது - செய்யபூமகட்குநற் செவிலி போன்றது - வையகம் பல்லுயிர் வளர்த்து நாடொறு - முய்யவே சுரந்தளித் தூட்டு நீரது." என்றும், "சென்னி வெண்குடை நீடநபாயன் திருக்குலம் புகழ் பெருக்கிய சிறப்பின்-மன்னுதொல் புகழ் மருதநீர்நாட்டு வயல்வளந்தர வியல்பினி னளித்துப்-பொன்னி நன்னதிமிக்க நீர்பாய்ந்து புணரிதன்னையும் புனிதமாக் குவதோர் - நன்னெடும் பெருந்தீர்த்தமுன்னுடைய நலஞ்சிறந்தது வளம்புகார் நகரம்." என்றும்வரும் அருண்மொழித்தேவ ரமுதவாசகானுந்தெளிக. (௧௪)

இன்னபொன்னி பன்னுமலைக் காரகிலு மாரமும்போ ரிபத்தின்கோடு, மின்னுமணி களும்பொன்னுஞ் செழுந்தேனுங் கொழுங்கனியும் விரைமென் பூவும், பன்னரிய பலவளனுங் காவிரிப்பூம் பட்டினத்துப் பரப்பவாங்கி, யந்நகரங் கடல்வளத்தா லியாவருக்கு மள்ளியள்ளியளிக்கு மாலோ.

(இ - ள்.) இவ்வாறாகிய காவிரிநதியினாலே சிலபேறான மலைகளிலுள்ள கருநிறங்கொண்ட அகிற்கட்டைகளையும், சந்தனக்கோடுகளையும், போர்புரியும் யானைத்தந்தங்களையும், விளக்கமுள்ள இரத்தினங்களையும், பொற்பொடிகளையும், செழிப்பான தேனையும், கொழுமையான பழங்களையும், மணமுள்ள மிருதுவான மலர்களையும், இன்னும் சொல்லுதற்கரிய பலவளப்பங்களையும் காவிரிப்பூம் பட்டினத்துள்ளோர் விசேடமாகப்பெற்று, அந்நகரத்திலுள்ள சமுத்திர வளப்பத்தினாலே எவர்களுக்கும் அள்ளியள்ளிக் கொடுப்பார்கள்.—எ - று.

காவிரிப்பூம்பட்டினத்திற் காவிரிநதி சங்கமுகத்துறையாயிருத்தலின். அந்நதி யடித்துக்கொண்டுவரும் அகிற்கட்டை சந்தனக்கட்டை யானைத்தந்தம் இரத்தினம் பொற்பொடி தேன் கனி மலர் என்னும் இவற்றுடனே இன்னும் பலவளப்பங்களையும் சமுத்திரமார்க்கமாய்க் கப்பலிலேறி வெகு தூரத்துள்ள பலதேயத்தாரும் அனுபவிக்கும்படி அந்நகரத்தார் கப்பல் வியாபாரம் செய்வார்களென்று விளக்குவான், "அந்நகரங் கடல்வளத்தால் யாவருக்குமள்ளியள்ளி யளிக்கும்." என்றார். ஆல்-ஓ-அசைகள். காவிரியின் சங்கமுகத்துறையிருக்கும் காரணத்தினாற்றான் அந்நகர்க்குக் காவிரிப்பூம்பட்டினம் எனப்பெயர் வழங்கிற் றென்பாருமுளர். (௧௫)

முடக்கியபா டகக்குனிப்பிற் பற்பலதீ வினிற்பொருள்கண் முகந்து நீந்தி, யெடுக்குமணி நாவாய்கள் நாவாய்கள் புகலரிதா மெழிற்பட் டாடைத், தடக்கொடிக ளசையவிசைக் காலேக வடந்தள்ளத்தள்ளா டாம, னடக்குமிடந் திருத்தேரிற் போற்றேவ ரெழுந்தருளனுட்டலாமே.

(இ - ள்.) வளைத்தபாடகமென்னும் ஆபரணத்தின் வளைவைப்போல, பற்பல தீவுகட்குச்சென்று ஆங்காங்குள்ள வஸ்துக்களை நிரப்பிக்கொண்டு கடலைக் கடந்துவருகின்ற அழகிய மரக்கலங்க ளிவ்வளவென்று பல நாக்களாலும் பலவாய்களாலும் கூறுதற் கருமையாகும். அழகிய பட்டு வஸ்திரத்தாலாகிய விசாலித்த கொடிகளசையவும் காற்றின் வேகத்தாற் செல்லவும் வடத்தைத் தள்ளவும், அம்மரக்கலங்கள் அசையாமற் போகின்ற துறைமுகத்தை அழகிய இரதத்தின்மேற் கடவுளெழுந்தருளுமிடத்திற் கொப்பாகக் கூறலாம்.—எ - று.

கடலில் மரக்கலங்கள் செல்லுகையிற் சிவபிரானெழுந்தருளிப இரதத்தைப்போன் றிருக்கிறதென்று, அத்தேர்க்குள்ள கொடிகளும் வடமும் இம்மரக்கலங்கட்கு மிருத்தலை யுவமித்துரைத்ததுமன்றி, மரக்கலம் செல்லுவதற்குக் காற்று உதவியாவதுபோல் இரதம்செல்லுவதற் குருளைகள் உதவியாமென்று சிலேடைப் பொருள்பட, "விசைக்காலேக." எனவும் கூறினர். ()

போற்றுமள காபுரியு முயருமம ராபதியும் பூம்புகார்க்குத்
தோற்றுறையு மாறுபெறு தேக்கறுமாற் பாணுத மேசாதிநாத [ர்க்
ராற்றலிடங்கொண்டிருந்தார் சிவஞானவெண்காடரமர்ந்தாரன்னே
கேற்றநிறை குபேரனையும் வச்சிரவாளனையுமிக நிசைக்கொணுதே.

(இ - ள்.) யாவராலும் துதிக்கப்படுவதாகிய குபேரபட்டினமும் அதற்கும் மேம்பட்ட தேவலோகமும் காவிரிப்பூம்பட்டினத்திற்குத் தோல்வியுற்று வசிக்கும். எதிராக நிற்றற்கேலாமல் அவமானமடையும். அமுதேச்சுரரென்னும் சோதி சொரூபராகிய சிவபெருமான் அந்நகரையே தமக்கு விருப்பமுள்ள இடமாகக்கொண்டு வீற்றிருந்தனர். அன்றியும், சிவஞானமுடைய திருவெண்காடரும் வீற்றிருந்தார். ஆதலால், அந்நகரத்தினர்க்கு மேம்பாடு மிக்க குபேரனையும் வச்சிராயுதனுகிய இந்திரனையும் ஒப்புக்கூறலாகாது.எ-று.

நிலவுலகத்திற் சிறந்தது அளகாபுரியும் அதனினும் சிறந்தது தேவலோகமுமாகலின், "போற்றுமளகாபுரியு முயருமமராபதியும்." எனவும், அவ்விரண்டும் காவிரிப்பூம்பட்டினமுள்ள இந்நிலவுலகத்தார்க்குப் புலப்படாமல் மறைந்திருத்தலின், "பூம்புகார்க்குத் தோற்றுமறையும்." எனவும் அவ்விரண்டு நகரங்களும் வெகுகாலமாய் மறைந்திருத்தலின், "எக்கறும்." எனவும், ஆண்டானும் அடிமையுமாகிய அமுதேச்சுரரும் திருவெண்காட்டடிகளும் இந்நகரத்திருத்தலின், அவ்விருவரையும் தரிசிக்கப்பெற்ற இந்நகரத்தார்க்கு, முற்கூறிய அளகாபுரி அமராபதி என்னும் இரண்டின் தலைவர்களாகிய குபேரனையும் இந்திரனையும் ஒப்புக்கூறலாகா தென்பார், "பானுதசோதி நாத ராற்றலிடங் கொண்டிருந்தார் சிவஞான வெண்காட ரமர்ந்தா ரன்னோர்க் கேற்றநிறை குபேரனையும் வச்சிரவாளனையுநிக ரிசைக்கொணுதே." எனவும் கூறினர். (௧எ)

செய்யநிறப் பவளவல்லி மவுலிமணி கண்டமெண்டோட்டிருந்தமே
மையனுறை பல்லவனீச் சரமுமவிர் வரிபிரச வமுத மாந்தி [வு
மையலிசைத்தேனளிக்குங் குளிர்சோலை நிலைமலியவளமாடஞ்சூழ்ந்
துய்யுநெறிதருஞ்சாயா வனமுமவன்கோயில்களுமொளிருமாலோ.

(இ - ள்.) அக்காவிரிப்பூம்பட்டினத்திற் கருகில், செந்நிறமுள்ள பவளக்கொடிபோன்ற சடைமுடியும் நீலகண்டமும் அஷ்டபுயங்களும் செப்பமாம்படி பொருந்திய சிவபெருமான் வீற்றிருந்தருளும் திருப்பல்லவ னீச்சரமென்னும் திருப்பதியும், விளங்குகின்ற வண்டுகள் தேனென்னும் அமுதத்தைக் குடித்து, மயக்கத்தினாலே இசையாகிய தேனைக்கொடுக்கின்ற குளிர்ந்தசோலைகள் நிலைபேறுக விர்த்தியாகச் செல்வமுடைய மாளிகைகள் நாற்றிசைகளினுமுள்ள, ஆன்மாக்க ளீடேறும் மார்க்கத்தைப் பாலிப்பதாகிய சாயாவனமும், இன்னும் சிவபெருமானுக்குரிய ஆலயங்களும் விளங்கும்.—எ-று.

காவிரிப்பூம் பட்டினத்திற்கருகில் திருப்பல்லவனீச்சரமும் மற்றும் சிவாலயங்கள் பலவுமிருக்கின்றனவென் றுணர்த்தியவாறறிக. (௧அ)

வெள்ளிமலை பொன்மலைதூமணிகலைகள் வெண்காடர் வீட்டினிட்ட
வொள்ளியசோ தியரிவரை யாட்காள்வா ளுளாகி யுவந்துவந்தார்
தெள்ளியரா மிவர்க்கிவைக ளுளவேனு மிங்கிருக்கச் செய்தார்போ
புள்ளினொலிமலைசோலை வேதவொலி மலைசாலைப் பூம்புகாரே.[லும்

(இ-ள்.) வெள்ளிமலைகளும் பொன்மலைகளும் சுத்தமாகிய அரதனமலைகளும் வெண்காட்டடிகளின் மனையிற்சேர்த்த, விளக்கமுள்ள சோதிசொரூபராகிய சிவபெருமான் இவ்வெண்காட்டடிகளை யடிமைகொள்ளும்பொருட்டு மானிடவடிவெடுத் தெழுந்தருளினர். மெய்ஞ்ஞானத் தெளிவினராகிய வெண்காட்டடிகட்குப் பூர்வமே இவைகளுள்ளனவேனும், இந்நகரத்திற் செல்வமலிந்திருப்பதற்காக அவ்வா றியற்றினர்போலுமென் றுரைக்கத்தக்கது, புட்களின் ஓசை விசேடித்த சோலைகளையும் வேதகோஷம் விசேடித்த சாலைகளையுமுடைய காவிரிப்பூம் பட்டினமாகும்.—எ-று.

திருவெண்காட்டடிகளை யடிமைகொள்வதற்காக அவருக்கு வேண்டிய வெள்ளி பொன் அரதனம்என்னும் இவற்றை விசேடமாக அவர்க்குப் பாலித்த சிவபெருமான், மீண்டும் தாமே மானிடவுருக்கொண்டு மெழுந்தருளினராகலின் காவிரிப்பூம்பட்டினம் மிக்க சிறப்புடைத்தென விளக்கியவாறறிக. ஆயின் பட்டினத்தடிகள் பூர்வசன்மத்திற் குபேரனாகலின், அடிமைகொள்ள வந்த சிவபெருமான், அவரைச் செல்வ மனுபவியாதவராகக் கருதி. இவ்வா றேனளித்தனரென்னின், அற்றன்று, அடிமைசெய்யப் புக்கோர் முனிவரேனும் அருநிதியமின்றெனின் அவலமாமாகலானும், இவர் அவதரித்த க்ஷேத்திரம் என்றும் செல்வம் நிறைந்திருக்க வேண்டுமாகலானும் அவ்வா றீந்தனரென்பார், "தெள்ளியரா மவர்க்கிவைக ளுளவேனு மிங்கிருக்கச் செய்தார் போலும்" என்றனர். முனிவர்க்கும் பொன்வேண்டுமென்பதை, "முனிவருமன்னரு முன்னுவபொன்னுன் முடியுமெனப்-பனிவருங் கண்பர மன்றிருச்சிற்றம் பலமணையாய்-துனிவரு நீர்மையி தென்னென்று தூநீர் தெளித்தளிப்ப-கனிவரு நாளிது வோவென்று வந்திக்கு நன்னுதலே." என்னும் திருக்கோவையாரானுந்தெளிக. (௧௯)

கொள்வார்தம் பேரோதை கொடுப்பார்தஞ் சீரோதைகுளிர் சங்கீன்ற, வெள்ளாரக் கருங்கடலி னோதையினை விழுங்கியிருவிசும்பி னோங்கு, முள்ளாருஞ் சிறுவீதி பலசாதித் தொழிலோதையொழிவிலாவாம், பொள்ளாத நாகமணி யகங்கடோறும் விளக்கொளிரும் பூம்புகாரே.

(இ-ள்.) அந்நகரத்தின் ஆவணவீதிகளில் வஸ்துக்களை வாங்குவோருடைய பெருங்கோஷமும், விற்பவர்களின் சிறந்தகோஷமும், குளிர்ந்த சங்குகளீன்ற முத்துக்கணிறைந்த கருநிறச் சமுத்திரகோஷத்தை யடக்கிப் பெருமைமிக்க தேவலோகமட்டும் விளங்கும். அந்நகரத்திற்குள் நிறைந்துள்ள சிறியவீதிகளிலே பற்பலசாதியார் தத்தமக்குரிய தொழில்களை இயற்றுவதா லுண்டாகும் கோஷமும் ஒழிவற்றதாகும், துவாரமிடாத நாகரத்தினங்களே வீடுகளிலெல்லாம் விளக்காக எரியத்தக்கது காவிரிப்பூம்பட்டினமாகும்.—எ-று

எனவே அக்காவிரிப்பூம் பட்டினத்துள்ள ஆவணவீதிகள் தொழிலாளர் வீதிகள் பொருளாளர் வீதிகள் என்னும் இத்தகைய வீதிகளின் சிறப்புரைத்தபடி. (௨௦)

நாரதனுரிசைமடந்தை யிசையமுதஞ் செவிவார்ப்ப நயந்துகே ட்போன், வாரணங்குர் துணைமுலையா ளுருப்பசிவா ராதிருக்கும் வண்ணங் கண்ணிச், சீருலகின் மானிடமா மகளாகப் பிறக்கவென த்தேவர் கோமான், போரியைந்த சாபமிட மாதவியா யவள் பிறந் தபூம்பு காரே.

(இ-ள்.) நாரதமகாமுனிவரும் நாமகளும் கீதமென்னும் அமுதத்தைச் செவிவழியாயூட்ட விரும்பிச் சிரவணிப்போனுகிய இந்திரன், கச்சுவருந்துகி ன்ற இரண்டு கொங்கைகளையுடையாளாகிய ஊர்வசி, ஓர்நாள் தன்சபைக்கு வராதிருப்பதைச்சிந்தித்து, சிறப்புற்ற நிலவுலகத்தில் மானிடப்பெண்ணுய்ப் பிறக்கக்கடவாயென்று கொடுமையமைந்த சாபங்கொடுக்க, அவ்வூர்வசி மாத வியென்பவளாகப் பிறந்ததும் காவிரிப்பூம்பட்டினமாகும்.—எ-று.

மணிமேகலையின்றாயும் கண்ணகியின் மாற்றாளும் கோவலனென்போ ன் அபிமான பத்தினியுமாயிருந்தவள் மாதவி. இதனைச் சிலப்பதிகாரம் மணி மேகலை சீவகசிந்தாமணி என்னும் இவ்விலக்கியங்களிற் பரக்கக்காணலாம். ()

தெய்வமகண் மானிடமா மகளாக மானிடப்பெண்டெய்வ மாகச், செய்தவன்வா சவனென்னக் கண்ணகியைவிமானத்திற் சேர்த்தியன்னு, டெய்யகண வனைச்சேரச் சேர்த்தினன்மு னன்னமா துறைந்தவூராம், பொய்யுரையா மாந்தர்களி யிறும்பூது நிறைந்தே றும் பூம்புகாரே.

(இ-ள்.) தேவமாதை மானிடமாதாகவும் மானிடமாதைத் தேவமாதாக வும் செய்தவன் இந்திரனேயென்று உலகத்தாருரைக்குமாறு, கண்ணகியைத் தெய்வவிமானத்தேற்றி, அவளுடைய தூய்மையமைந்த பத்தாவைச் சேரும் படி சேர்த்தான். அதற்குமுன் அக்கண்ணகி வசித்தவூராவது, பொய்பேசாத சத்தியவான்கள் களிப்பும் ஆச்சரியமும் மேம்பட்டுக் குடியேறுகின்ற காவிரிப் பூம்பட்டினமேயாகும்.—எ-று.

ஊர்வசியென்னும் தேவமாதை மாதவியென்னும் மானிடமாதாகும்படி சபித்த இந்திரனே, பின்னும் கண்ணகியென்பவளைத் தேவவிமானத்தேற்றின மையின், "தெய்வமகண் மானிடமா மகளாக மானிடப்பெண் டெய்வமாகச்- செய்தவன்வா சவனென்னக் கண்ணகியை விமானத்திற் சேர்த்தி யன்னு- டெய்யகண வனைச்சேரச் சேர்த்தினன்" என்றார். இந்திரன் கண்ணகியைவிமா னத்திற் சேர்த்திக் கணவனைச் சேர்வித்தனனென்பதை, "எழுநா ளிரட்டி யெல்லை சென்றபின் - றொழுநா ளிதுவெனத் தோன்ற வாழ்த்திப்-பீடுகெழு நங்கை பெரும்பெய ரேத்தி - வாட மாமலர் மாரி பெய்தாங்-கமரர்க் கரசன் றமர்வந் தேத்தக்-கோநகர் பிழைத்த கோவலன் றன்னொடு-வானவூர்தியேறி னண்மாதோ-கானமர் புரிகுழற்கண்ணகிதானென." எனவும், "தெய்வந்தொ ழாள் கொழுநற் றொழுவானைத் - தெய்வந் தொழுந் தகைமை திண்ணமாற்- றெய்வமா - மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி - விண்ணக மாதர்க்கு விரு ந்து." எனவும் சிலப்பதிகாரம் கட்டுரைகாதையில் வருதலானு முணர்க. ()

வே று.

நெடுங்கருங் கோட்டுப்புன்னை நிறைந்தபூங் கொத்திற் செந்தேன்
படுங்கருந் தும்பி மாந்திப் பாடிடும் பொன்னிநாட்டு
ளொடுங்கிடை மடந்தை மார்க ளுண்டுகொண் டாடுந் தண்டேன்
விடும்பரி சென்னக் கானம் விளைப்ப ராற் பூம்புகாரே.

(இ - ள்.) கருநிறங்கொண்டு நீண்டுள்ள கிளைகளைப்படைத்த புன்னை விருட்சத்தின் நிறைந்திருக்கும் மலர்க்கொத்திலே துளிக்கின்ற சிவந்த தேனைக் கறுப்பான வண்டுகள் குடித்து ரீங்காரம் பாடுகின்ற சோழநாட்டினுள்ளே, காவிரிப்பூம்பட்டினத்திலுள்ள தேய்ந்த இடையையுடைய மாதர்கள், தாங்கள் குடித்துக் களிக்கின்ற தண்ணியதேனை வெளியில் விடுகின்ற தன்மையைப் போன்று கீதம்பாடுவார்கள்.—எ-று.

கருநிறவண்டுக ளெவ்வாறு செந்தேனைக்குடித்து ரீங்காரஞ் செய்கின்றனவோ அதுபோன்றே, அவ்வண்டுக ளுண்ணவொட்டாமற் றாரத்தி யத்தேனைக்குடித்த மாதர்களும், மீண்டும் அத்தேனையே வெளியில் விட்டது போல மதுரமாயிருக்கும்படி யாவர்க்கும் இனிப்பான கீதத்தைப் பாடுவார்களென்றபடி. (உ௩)

தொக்ககார் மின்னித் துன்னுஞ் சோலைசூ ழிடங்க டோறும்
புக்குறு தீய மாக்கள் புகும்புனற் பொன்னி நாட்டுத்
திக்கெலாம் புகழு நல்லோர் செல்குவார் மலகுவாராய்த்
தக்குளா ரல்லார் பொல்லார் தாம்புகார் பூம்பு காரே.

(இ - ள்.) சூற்கொண்ட மேகங்கள் மின்வீசி நெருங்குகின்ற சோலைகள் சூழ்ந்த அந்நகரிடங்களெங்கெங்கும், பிறவியடையாத பரிசுத்த ஆன்மாக்கள் தவஞ்செய்தற்குச் சேர்கின்ற, நீர்வளப்பமுள்ள சோழநாட்டிலிருக்கும் காவிரிப்பூம் பட்டினத்தில், அஷ்டதிசைகளினும் துதிக்கப்படும் பெரியோர்கள் கீர்த்தியின் மேம்படுவார்களாய்ப் போவார்கள். தகுதியுடையவர்களல்லாத தீயோர் சேரார்கள்.—எ - று.

தவசிகள் தவம்புரிதற்குரிய இடங்களமைந்த சோழநாட்டிலிருக்கும் காவிரிப்பூம்பட்டினத்தில், பிறவியெய்தப்பெறாத பெரியோர்களே மேன்மேலும் விர்த்தியாய்ச் சேர்வார்கள். இதனால் அத்தகையதன்மை வாய்க்கப்பெறாத கொடியோர்கள் அங்கணுகார் என்றபடி. எனவே, நல்லோரிருக்குமிடத்திற் றீயோரணுகாரென்பது கருத்து, இதனை, "கற்றோர் கனமறிவர் கற்றோரே கற்றறியா-மற்றோ ரறியார் வருத்தமுறப்-பெற்றறியா - வந்தி பரிவாய் மகவைப் பெறுந்துயர-நொந்தறிகு வாளோ நுவல்" என்னும் நீதிவெண்பாவானுந் தெளிக. புக்கம் எனற்பாலது அம்முச்சாரியை பெறாது புக்கு என நின்றது. புக்கம் ஈண்டு பிறவியின்மேற்று. (உ௪)

கன்னெடுங் குன்றந் துன்றுங் கடிகமழ் குறிஞ்சி மான
மென்னெடுங் குன்றந் துன்று நெடுநிலம் பொன்னிநாட்டு
வின்னெடுங் குன்றந் துன்று மின்னிடை மார்பாற் கொங்கைப்
பொன்னெடுங் குன்றந் துன்றும் புண்ணியப் பூம்பு காரே.

(இ - ள்.) சோழநாட்டின் நீண்ட நிலங்களெல்லாம், கல்லாலாகிய உயர்ந்த மலைகள் செறிந்த மணம்வீசும் குறிஞ்சிநிலத்தைப்போன்று, நெல்லின் பெரிய மலைகள் நெருங்கும். அந்நாட்டின்கணுள்ள புண்ணியநிலமான காவிரிப்பூம்பட்டினமென்னும் நகரத்திலே, ஆபரணங்களின் ஒளியென்னும் உன்னதவரைக ளடர்ந்த மின்போலும் இடையுடைய மாதர்களிடத்து, தனங்களென்னும் பொன்னிறமுள்ள ஓங்கியகிரிகள் நெருங்கியிருக்கும்.—எ-று.

சோழநாடு மருதநிலமாகவும் அதனைக் குறிஞ்சியாக உவமித்ததற்கேற்ப, அந்நிலத்திற்குரிய மலைகளைக் காட்டுவான், "நென்னெடுங் குன்றம்-வின்னெடுங்குன்றம்-பொன்னெடுங்குன்றம்" என்னும் மும்மலைகளைக் கூறினமை காண்க. (உரு)

வெளிதங்கும் வெண்ணெற் போர்கள் விண்ணளப் பனபோனண்ணு
மளிதங்கி முரலுஞ் சோலை யாலையம் பொன்னி நாட்டி
ளொளிதங்கு சங்கி ஞா மோங்குபூங் குவால மெல்லாம்
புளினங்கள் போன்று தோன்றும் புண்ணியப் பூம்பு காரே.

(இ - ள்.) வண்டுகள் வசித்து ஒலிக்கின்ற சோலைகளும் கரும்பாலைகளு மமைந்த சோழநாட்டின்கண்ணுள்ள புண்ணியம் விளைகின்ற காவிரிப்பூம்பட்டினத்திலே, வெளியிலிருக்கும் வெண்ணிறமுள்ள நெற்போர்கள்யாவும், ஆகாயத்தை யளப்பவைபோலக்கிட்டும், ஒளிபொருந்தும் சங்கமுத்துக்களின் மேடும், மேலோங்கிய மலர்மேடும் ஆகிய இவையாவும் வெண்மணற் குன்றுகள்போலக் காணும்.—எ-று.

காவிரிநதி முத்துக்களையும் மலர்களையும் அடித்துக்கொண்டு வருதலால் அவ்விரண்டும் மணற்குன்றுகள்போற் றோன்றுமென்றனர். காவிரிநதி இவ்வாறு பொன்முத்து முதலியவற்றை யடித்துக்கொண்டு வருமென்பதை, "அணியும் பைம்பொனு மலங்கிய நவமணிக் குவாலு-நணியிற் காவிரி நல்கலா னதியினைத்தந்த - திணிய சையமால் வரைசிறப் பளித்திடுஞ் சிந்தா - மணியென் றுட்கொளற் கையமொன் றில்லையா மதிக்கில்." எனவும், "தவநிதிச் சைய மாநதி தனங்களை வாரித் - துவனி திக்கினிற் போக்கியே தொடர்ந்திடுந் தொடர்பா-லவனிதின் றமா லமுதையா யடைந்திடு மடுக்க-னவநிதிக்குழு வெனநவின் றிடநலந்தழைக்கும்." எனவும் வரும் காவிரிப்புராணத் திருவிருத்தங்களானுந் தெளிக. (உசு)

வேறு.

காரோடுங் களிறோடுங் கடற்றிரைவாம் பரியோடுந்
தேரோடுங் கலமோடுந் தேவர்கள்செல் வர்களோடப்
பாரோர்க ளையுறுவார் படைக்குழா மெனப்பகர்வா
ராரோவிந் நகர் புகழ்வா ரளந்தறியா வளந்தருமே.

(இ-ள்.) மேகங்கள் ஓடுவதுபோன்று யானைகளுலாவும், கடலின் அலைகள் உலாவதுபோலத் தாவிச்செல்லும் குதிரைகளோடும், இரதங்களோடுவதுபோல மரக்கலங்கள் திரியும் தேவர்களும் அரசர்களும் திரிவதனால், உலகத்துள்ளார் சந்தேகிப்பவர்களாய் இவை சைனியத்தொகுதியென் றுரைப்பார்கள், இந்தநகரமானது அளந்துணர்தற் கேலாதவளப்பங்களைக் கொடுக்கின்றமையால், இந்தநகரத்தைப் புகழத்தக்கவர்கள் எவர்களோ;—எ-று.

சைனியங்களும் இரதகஜ துரகபதாதிகளென நால்வகைப்படுதலின், இந்நகரத்திலுலாவும் இரதங்கள்போன்ற மரக்கலங்களையும் யானைகளையும் குதிரைகளையும் தேவர்களையும் அரசர்களையும் சதாபார்க்கின்ற உலகத்தாரனைவரும்நால்வகைச் சைனியங்களாகவே அவைகளை நினைத் தையுறுவார்களென்றனர். (௨௭)

இந்நகர்போ லெந்நகரு மிவ்வுலகத் திடைக்காணேம்
பொன்னகரோ வெனிலந்தப் பொன்னகர்வாழ் புரந்தரனே
மன்னியபூ வினிற்போந்து வளம்பிறங்க வணிவித்தா
லெந்நகரும் பூம்புகார்க் கேற்றமிணை யிலவாமே.

(இ-ள்.) காவிரிப்பூம்பட்டினம் என்னும் இந்தநகரத்தைப்போன்று எந்தநகரமும் இவ்வுலகத்திற் கண்டேயில்லை. தேவலோகமோ என்றால், அத்தேவலோகத்தில் வாழ்கின்ற இந்திரனே, நிலைபேறான இந்நிலவுலகத்தில்வந்து, செல்வம்விளங்கும்படி இந்நகரத்தை அலங்காரம் செய்வித்ததால், எந்தநகரமும் இந்தக்காவிரிப்பூம் பட்டினத்திற்கு உயர்வுள்ளதாகவும் ஒப்புள்ளதாகவுமில்லை.

இவ்வுலகத்துள்ள நகரங்களிற் காவிரிப்பூம்பட்டினத்திற் கொப்பான நகரம் இல்லை. இவ்வுலகத் திராவிடினும் இதற்கு மேலுலகமாகிய தேவருலகத்தேனுமுண்டோ எனின், அவ்வுலகத்திறைவனாகிய இந்திரனே இவ்வுலகத்திற்குவந்து இந்நகரை அலங்காரம் செய்வித்தானென்னும் சரிதமிருத்தலின், எவ்வுலகத்தினும் இந்நகரத்திற் குயர்ந்ததாகவேனும் ஒத்ததாகவேனும் ஓர்நகரமுமின்றென்று நிச்சயிக்கப்பட்டு, ஏனைய நகரங்கள்யாவும் இந்நகரத்திற்குக் கீழ்ப்பட்டனவேயென்று முடிவாக்கப்பட்டதென்றபடி. என்னை, சொர்க்கம் மத்தியம் பாதலம் என்னும் மூவகையுலகங்களில், மத்தியவுலகமாகிய இந்நிலவுலகமே புண்ணியம் புரிதற்கேற்றது, சொர்க்கமோவென்றால், அப்புண்ணியப்பயனை அனுபவித்தற்குரியது, அத்தகைய சொர்க்கலோகத்தாரும் சிவபிரானைப் பூசித்தலாகிய பதிபுண்ணியம் புரிதற் கிந்நிலவுலகத்திற்கு வரவேண்டியிருத்தலின், பாதலலோகத்தாரும் புண்ணியம் புரிதற் கீண்டுவரவேண்டுமென்பது சொல்லாமேயமையும். அத்தகைய இந்நிலவுலகத்திற் சிறந்தது காவிரிப்பூம்பட்டின மென்போமாயின் இதற்குநிகரானநகரம் எவ்வுலகத்தினுமில்லையென்பதற் கையமில்லை யென்றவாறாயிற்று. புண்ணியம்புரிதற்கேற்றது நிலவுலகமேயென்பதை, "புண்ணியம்புரி பூமிபா ரதில்வரு போக-நண்ணியின்புறு பூமிவா னுடென்ப நாளும்-புண்ணி யம்புரி பூமியு மதில்வருபோக-நண்ணி யின்புறு பூமியு மதுரைமா நகரம்." என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. (௨௮)

பூம்புகார்ச்சருக்கம் முற்றிற்று

ஆகத் திருவிருத்தம் - ௫௪.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# ஆட்கொண்ட சருக்கம்.

மடைமருத நறும்பழனங் கரும்புகளொண்பெருஞ்சாலிவளங் களோங்கப் புடைமருக வனன் சூழத் தவமியற்று முனிவர் குழாம் புகழ்ந்து போற்ற, விடைமருதி லிருந்தபிரா னிருங்கருணைத் திறம் பிறந்த வியல்பி னாலே. படைமருதங் தரவளவெண் காடரை யாட்கொண்டதொரு பரிசு சொல்வாம்.

(இ-ள்.) நீர்மடைகளுடைய மருதநிலத்தின் நறுமணங்கமழும் வயல்களிலே கரும்புகளும் சிறந்த பெரிய நெற்கதிர்களின் வளங்களும் விர்த்தியாகவும், பக்கத்திற்பொருந்திய நெருப்பு தம்மைச்சூழ்ந்திருக்கும்படி தவம்புரிகின்ற முனிவர்கூட்டங்கள் மிகவும் சிலாகித்துத்துதிக்கவும், திருவிடைமருதூரி லெழுந்தருளிய சிவபிரான், பெருந்தன்மைவாய்ந்த திருவருட் பரிசுதித்த சுபாவத்தினாலே, தேவலோகத்துள்ள தம் தரத்திற்கேற்ற செல்வம்பெற்றிருந்த திருவெண்காடரை அடிமைகொண்ட ஓர் சரிதையைக் கூறுவாம்.—

நீர்வள மிகுதியை யுணர்த்துவான், "மடைமருத நறும்பழனங் கரும்புகளொண் பெருஞ்சாலி வளங்களோங்க." எனவும், அங்கிருக்கும் முனிவர்களனைவரும் அத்தலத்தைப் புகழ்ந்தவர்களாய்ப் பஞ்சாக்கினிமத்தியில் தவம்புரிகின்றார்களென் றுணர்த்துவான், "புடைமருத வனன்சூழத் தவமியற்றுமுனிவர்குழாம் புகழ்ந்து போற்ற" எனவும், சிவபிரானுக்குக் கருணைதோன்றுதலியல்பென்பதை விளக்குவான், "இடைமருதி லிருந்தபிரா னிருங்கருணைத் திறம்பிறந்த வியல்பினாலே" எனவும், திருவெண்காடர் செல்வமிகுதி படைத்தோரென்பதை விளக்குவான், "தந்தர மருவளம் படைவெண் காடரை" எனவும் கூறினர். (க)

வே று.

பொன்னி லங்கிய பூம்புகார்ப் பட்டினந்
தன்னின் மன்னுந் தலைவர் கலைகளாற்
பன்ன ரும்புகழ்ப் பட்டினத் துப்பிள்ளை
யென்னு மிக்குடி நாம மியன்றுளார்.

(இ-ள்.) திருமகள் விளங்குகின்ற காவிரிப்பூம் பட்டினத்திலே, நிலைபேறான முதல்வரும், நூல்களாற் கூறுதற்கரிய கீர்த்திவாய்த்த பட்டினத்துப் பிள்ளை என்றுரைக்கும் இக்குடிப்பெயர் பெற்றவரும்.—எ-று.

காவிரிப்பூம்பட்டினத்தில் இவரே முதல்வராகி யிருந்தமையின் அக்குடிக்கேயன்றி அப்பட்டினத்திற்கே இவர் குமாரர் என்னும் பொருள்படப் பட்டினத்துப் பிள்ளையென்பது குடிப்பெயராகப் பெற்றுக்கொண்டவர் என்றபடி. (உ)

கருணை யாளர்வெண் காட ரெனும்பெயர்
மருவி னார்மணி வண்ணனின் வாழ்குவார்
பொருவி லாச்சிவ புண்ணிய நண்ணினா
ரிருவி சும்பி னமரரு மெண்ணவே.

(இ-ள்.) கிருபையுடையாரும் திருவெண்காடர் என்னும் திருப்பெயர் கொண்டவருமாகிய இவர், திருமால்போன்று வாழ்பவராய், பெருமைமிக்க தேவலோகத்துள்ள தேவர்களும் மதிக்கும்படி, ஒப்பற்ற சிவபுண்ணியத்தை யடைந்தனர்.—எ-று.

கருணையும் செல்வமுமுடையவர்க்குச் சிவபுண்ணியமுண்டா மென்பதை விளக்கியபடி. (ந)

கலங்க ளெண்ணில் கடலிடை யோடுவ
நிலங்கள் புக்கு நெடுந்தொலை நீணிதிக்
குலங்கள் கொண்டு குலாக்கொடு மீள்குவ
வலங்க ளாயிர மாயிர மென்பவே.

(இ-ள்.) அளவிறந்த மரக்கலங்கள் சமுத்திரத்தில் ஓடிக்கொண்டிருக்கின்றனவாய், நெடுந்தூரத்திலிருக்கும் தீவுகளுக்குச்சென்று, பெருந்திரவியத் தொகுதிகளை ஏற்றிக்கொண்டு களிப்படைந்து மீள்கின்றன, கலப்பைகள் ஆயிரமாயிரமாயிருக்கின்றன என்றுரைப்பார்கள்.—எ-று.

எனவே, அவ்வெண்காடர் பலவியாபாரஞ்செய்தது மன்றியில் ஆயிரமாயிரங்கணக்கான கலப்பைகளைக்கொண்டு பயிர்த்தொழிலுநடத்திவந்தாரென்றபடி. (ச)

காணு மின்னவை கற்புடை மாதரார்க்
காணி யாங்கள மாயிர மென்பரால்
வாணி கேள்வன் வகுத்ததன் றிச்செல்வ
நீணி லாமுடி நித்தன ளித்தவே.

(இ-ள்.) காணப்படுகின்ற இந்நிலங்கள், கற்புள்ளமகளிர்கட்குமானியமாகிய ஆயிரங்காணிகளென்றுரைப்பார்கள். இத்தகைய ஐஸ்வரியம் அத்திருவெண்காட்டடிகட்குக் கலைமகள் கணவனாகிய பிரமன் படைத்ததல்ல, சந்திரனையணிந்த நீண்டசடைமுடியையுடைய சிவபிரான் பாலித்தவை. எ - று.

மேற்கூறியபடி திருவெண்காட்டடிகள் ஆயிரமாயிரங் கணக்கான கலப்பைகளைக்கொண்டுழுது பயிரிடும் நிலங்களெவையும், அந்நகரத்துக்கற்புடைய

6

மாதர்களுக்குமானியமாக விடப்பட்ட நிலங்களாகும். கப்பல் வியாபாரத்தாலும் பயிர்த்தொழிலாலும் திருவெண்காட்டடிகளடைந்த செல்வமெல்லாம் பிரமனமைத்த விதிப்படி கிடைத்தனவல்ல, சிவபிரான் அவ்வடிகண்மாட்டுள்ள அன்பினாலளிக்கப்பட்டவையாம். (௯)

கற்ப கப்பெயர்க் காமரு தாருவும்
பொற்பு நீடிய பூமணிச் சங்கமும்
நிற்ப கற்பக வெண்காடர் நின்றதா
மற்பு தத்திரு வெண்கா டாகுமே.

(இ-ள்.) கற்பகம் என்னும் பெயருடைய அழகின் மேம்பட்ட விருட்சமும், மேம்பாடுவிசேடித்த பதுமநிதியும் சிந்தாமணியும் சங்கநிதியும் தேவலோகத்திலேயே நின்றுவிடும்படி, கல்விதேர்ந்த மனத்தினராகிய திருவெண்காட்டடிகள் வீற்றிருந்தது, அற்புதத்தையுடையதாகிய திருவெண்காடு என்னும் திருப்பதியாகும்.—எ-று.

கொடையிற்சிறந்த கற்பகம் பதுமநிதி சிந்தாமணி சங்கநிதி என்னும் இவையாவும் இத்திருவெண்காடரின் கொடையை நோக்கி, இவ்வுலகத்தில் அன்னோர்க்கெதிரில் வருதற்கு நாணி அத்தேவலோகத்திலேயே தங்கியிருக்கும்படிச்செய்த கொடையாளரெனவிளக்குவான், "கற்பகப்பெயர்க்காமரு தாருவும்-பொற்புநீடிய பூமணிச்சங்கமும்-நிற்பகற்பகவெண்காடர் நின்றது." என்றார். (௩)

அரச ருமிவர்க் கஞ்சுவர் நெஞ்சுளே
பரசு பாணிப் படையுடைப் பண்ணவன்
விரத நிற்கும் விறலுடை யோரெனு
முரசு மும்முர சும்முழங் கும்மரோ.

(இ-ள்.) பரசு என்னும் படையைத் திருக்கரத்துடைய கடவுளின் விரதத்திற் றவறுதொழுகும் வல்லபமுடையோ ரிவரென்றெண்ணி, இத்திருவெண்காடர்க்கு அரசர்களாயுள்ளோரும் மனத்தின்கண் அச்சமடைவார்கள். அன்றியும் இவர் மாளிகையில் ஒலிக்கின்ற மும்முரசங்களும் கோஷிக்கும் —எ-று.

பரசு - மழு; திருவெண்காட்டடிகள் மழுவலத்தேந்திய வரதனை வழிபட்டு மாறாச்சிவானந்த மெய்தி மகிழ்வுற்றிருப்போராகலின், இவர் திறமையைக்கண்ட மன்னர் யாவரும் அச்சமுறுவார்களென்று கூறுவான், "பரசுபாணிப்படையுடைப் பண்ணவன் - விரதநிற்கும் விறலுடையோரெனு-அரசருமிவர்க்கஞ்சுவர் நெஞ்சுளே." என்றார். கடவுளை வழிபடுவோர் அத்தகைய மேலாஞ்சுகமுறுவரென்பதை, "மன்னராவாருறுசுகமும் வானோர் மகிழ்ந்துபெறுசுகமு-மணிப்பைந்நாகத்தவர்சுகமு மற்றையோர்களடைசுகமும், பன்னுமிடத்திற் சிவத்தெழுந்த பரமானந்தலேசமெனப் - பகர்ந்தாய் குருவாயெ

மூந்தருளிப் படிதேன்மறைந்திக்குழல்கின்றேன்-கன்னலெழுந்ததெளிசாறே கட்டிமாவின் றீங்கனியே-கதலிக்கனியேநற்பலவின் கனகச்சுளையே கதிமுளையே, பொன்னம்பொருப்பேயென் விருப்பே போதச்சுகமே கிஞ்சுகமே-புரண வெளியேயுள்ளொளியே போரூர் முருகப்பெருமானே." என்னும் சிதம்பர சுவாமிகள் திருவாக்கானும் தெளிக. வீரமுரசு வெற்றி முரசு கொடை முரசு என்னும் இவையே மும்முரசுகளென்றுரைப்பர். (எ)

முன்றி றேறு முழுமணி வாளொளி
குன்ற வில்லி யடியர் குழாங்களுந்
துன்று மென்றுந் தொடுகடன் ஞாலத்து
ளொன்று மீங்கிவர்க் கொப்பல வென்பரால்.

(இ - ள்.) இவர் மாளிகையின் வாயிற்படிகளிலெல்லாம் மாணிக்கத்தின் சிறந்த பிரகாசமும், மேருவை வில்லாகவுடைய சிவபிரான் திருவடியார்களின் தொகுதியும் எக்காலத்தினும் நிறைந்திருக்கும். சகரர்களாற் றோண்டப்பட்ட கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்திலே, இவ்விடத்துள்ள இத்திருவெண்காடர்க்கு, ஒருலகத்துள்ளவர்களும் நிகரல்லவென்றுரைப்பார்கள்.—எ-று.

நிலவுலகத்திற் செல்வமிக்குடையோர் அரசராகலானும், அவரினும் மேம்பட்டோர் தேவலோகத்தார்களும் நாகலோகத்தார்களுமாகலானும்,மேற்கூறிய உதாரணச்செய்யுளில் இம்மூவுலகத்தாரின்பமும் பரமானந்தத்தின் லேசமென்று குறித்திருத்தலானும், அத்தகைய பரமானந்தமுடைய இத்திருவெண்காடருக்கு எவ்வுலகத்தாரும் இணையல்லரென்பதை விளக்குவான், "ஒன்றுமீங்கிவர்க்கொப்பல." என்றனர். (அ)

கோடி செங்கதிர் கூடி யுதித்தென
நீடு சோதி நிமலரைப் பாடுதற்
காடு மன்புவந் தங்குரித் தங்குரித்
தீடு கொண்டங் கிருக்கு மியல்பினர்.

(இ - ள்.) கோடி சூரியர்கள் ஒருங்குகூடி உதயமானாற்போன்று விசேடித்த சோதி சொரூபரான சிவபிரானைத் துதிப்பதற்காக, சொல்லப்படும் மெய்யன்பானது உள்ளத்திற்றோன்றித் தோன்றிமுளைத்து மேம்பாடுற்று அங்குவசிக்கும் தன்மையுடையவர்.—எ - று.

அன்பில்லார்க்குப் பிறிதோருயிர்மீது அருளுதியாதாகலின், முன்பு இவரது அருள்நிகழ்ச்சியாகிய கொடையைக் குறித்தபோதே அன்புவிளங்கியிருக்கவும், அவ்வன்பு ஆன்மாக்களின் மீதிரக்கத்தாற் றோன்றியது மாத்திரமே யன்றி, எமது பெருமானைத் துதித்தலினும் சென்றது என விளக்குவான் ஈண்டதனை வற்புறுத்திக் கூறினர். அன்புடையார்க்கே அருளுண்டென்பதை, "அருளென்னு மன்பின்குழவிபொருளென்னுஞ் - செல்வச்செவிலியாலுண்டு." என்னும் திருக்குறளுரையானுந் தெளிக. (கூ)

கற்ற கல்வியுங் கேள்வியுங் காண்குறிற்
குற்ற மின்றிக் குணங்கெழு கொள்கையார்
முற்று மீங்கிவர் நன்கு மொழிகுவார்
செற்ற மோவுஞ் சிவனடி யார்களே.

(இ - ள்.) ஒருவர்கற்ற கல்வியையும் கேட்ட கேள்வியையும்பார்த்தால், குற்றங்களில் மனம்வையாமல் மேம்பட்ட குணத்தையே சிந்திக்கும் கொள்கையுடையவர், இவ்வெண்காட்டடிகளின் நற்குணங்கள் எல்லாவற்றையும் கூறவல்லவர்கள், சினமென்பதறவேயொழிந்த சிவபத்தர்களேயாகும். எ-று.

நல்லார்க்குப் பிறர்குற்றத்தை நாடும் இயல்பே யின்றாகலானும், எத்தகையோரிடத்தும் எவ்வகைக்குற்றமேனு மொன்றிருக்கலாமாகலின் குற்றத்தையும் குணத்தையும் சீர்தூக்கி அவ்விரண்டின் மேற்பட்டதைக் கொள்வதே அறிஞர்கடனாகலானும், திருவெண்காட்டடிகள் குற்றத்திற் சிந்தைவையாது குணத்தையே கொண்டன ரென்பார், "கற்றகல்வியுங் கேள்வியுங் காண்குறிற் - குற்றமின்றிக் குணங்கெழுகொள்கையார்." என்றார். நல்லார் பிறர்குற்ற நாடாரென்பதை, "நல்லார் பிறர்குற்றநாடார் நலந்தெரிந்து-கல்லார் பிறர்குற்றங்காண்பாரோ - அல்லாத - வென்போல்வாரென்னை யிகழ்வாரோ வென்கவிக்குப் - பின்பாரோ காண்பார்பிழை" என்னும் ஔவைப் பிராட்டியாரமுதவாக்கானும், குணம் குற்றம் என்னும் இரண்டையும் சீர்தூக்கி மேம்பட்டதைக் கொள்ளவேண்டுமென்பதை, "குணநாடிக் குற்றமுநாடியவற்றின்-மிகைநாடிமிக்ககொளல்." என்னும் திருக்குறளானுந்தெளிக.

சத்தி யாங்குறு சம்புவின் றாண்மனம்
வைத்த செல்வமு மண்ணி னமக்குறா
துய்த்த செல்வமு முள்ளுமுள் ளத்தராய்
வித்த கத்தர் விளங்குமந் நாளிலே.

(இ - ள்.) அச்சிவதலத்துள்ள சிவபெருமான் உமாதேவியார் என்னும் இவரிருவருடைய திருவடிகளை இதயத்திற்பதித்த ஐஸ்வரியமும், மண்ணின் கூட்டமாய் அழிந்துபோகா வண்ணம் சேர்த்த ஐஸ்வரியமுஞ்சிந்திக்கும் சித்தமுடையவராய், மெய்ஞ்ஞான முற்றவராகிய திருவெண்காட்டடிகள் விளக்கமெய்தியிருக்கும் அக்காலத்தில்.—எ - று.

சிவபெருமான் திருவடியை இதயத்திருத்தலே அடியார்க்குப் பெருஞ்செல்வமாகலின், "சத்தியாங்குறு சம்புவின்றாண்மனம்-வைத்த செல்வமும்." எனவும், பொருளினுற்பொருளடைதல்போல அவ்வைஸ்வரியத்தாலடையும் முத்தியின்பமென்னும் ஐஸ்வரியம் ஏனைய ஐஸ்வரியங்களைப்போன்று அழிவதன்றென்பார், "மண்ணினமக்குறா-துய்த்தசெல்வமும்." எனவும் கூறினர். சிவபிரான் திருவடிகளை இதயத்திருத்தலே அடியார்க்கைஸ்வரியமென்பதை, "செல்வநெடுமாடஞ்சென்று சேணோங்கிச்-செல்வமதிதோயச் செல்வமுயர்கின்ற - செல்வர்வாழ்தில்லைச் சிற்றம்பலமேய - செல்வன்-கழலேத்துஞ் செல்

வஞ் செல்வமே,'' என்னுந் திருஞானசம்பந்த சுவாமிகள் திருவாக்கானும், ஏனைய செல்வங்கள் அழிந்துபோமென்பதையும், அவற்றை மெய்யன்பர்கள் மதியாரென்பதையும், ''சங்கநிதிபதுமநிதியிரண்டுந்தந்து தரணியொடுவானு ளத்தருவரேனு-மங்குவாரவர்செல்வ மதிப்போமல்லோ மாதேவர்க் கேகாந்த ரல்லராகி - லங்கமெலாங்குறைந்தழுகு தொழுநோயரா யாவுரித்துத்தின் றுழ லும் புலையரேனுங்-கங்கைவார்சடைக்கரந் தார்க்கன்பராகி லவர்கண்டீர்யாம் வணங்குங்கடவுளாரே.'' என்னும் திருநாவுக்கரசு சுவாமிகள் திருவாக்கானும் தெளிக. (கக)

வே று.

மஞ்சு சூழ்தரத் தேன்றுளிப் பூந்துணர் வயங்கச்
சஞ்ச ரீகங்கள் சஞ்சரித் திசைத்தமிழ் தழைக்க
வஞ்ச லித்தமர் முனிக்குழா மாரழ லோம்ப
வஞ்ச மில்லரன் வாழ்வது மருதமா வனமே.

(இ - ள்.) மேகங்கள்சூழவும், தேனைத்துளிக்கின்ற மலர்க்கொத்துக் கள் விளங்கவும், வண்டுகள் திரிந்து கீதங்களைப்பாடுதலால் இசைத்தமிழ் பரவவும், நமஸ்கரித்துக்கொண்டிருக்கின்ற முனிவர்கூட்டங்கள் நிறைந்த அக்கினியால் யாகம்வளர்க்கவும். வஞ்சனையில்லாத சிவபெருமான் வீற்றிருப் பது சிறந்த மருதவனமாகும்.—எ-று.

வண்டுகள் சஞ்சரித்தலால் நாடகத்தமிழும், அவைகள் ரீங்காரம் செய் தலால் இசைத்தமிழும், முனிவர்கள் யாகம் வளர்க்குங்கால் ஓதும் வேதத் தால் இயற்றமிழும், ஆகமுத்தமிழும் விளங்கப்பெற்றது மருதவனம் என்ற படி. காருகபத்தியம் ஆகவனீயம் தக்ஷிணாக்கினி என்னும் முத்தழலாலும் யாகம் வளர்க்கவேண்டுதலின், ''ஆரழலோம்ப.'' என்றார். (கஉ)

அவ்வ னத்திடை மருதிடத் தருளுருக் கொடுசேர்ச்
செவ்வி யானந்தத் திருப்பொரு ளிருப்பது தெளிந்தே
யிவ்வு ருக்கொடு திருப்பொரு ளிருப்பதென் றுணராப்
பவ்வ நான்மறை யவைவலோ ரெங்ஙனம் பகர்வார்.

(இ-ள்.) அந்தவனத்திலேயுள்ள மருதவிருட்சத்தினடியிலே அருள் வடி வங்கொண்டு, சிறப்பின்செப்பமமைந்த ஆனந்தசொரூபியாகிய சிவபெருமா னெழுந்தருளியிருப்பதைத் தேர்ந்து, இந்தவுருவங்கொண்டு சிவபெருமானி ருப்பதென்றறியாத, கடல்போன்று விரிந்துள்ள சதுர்வேதங்களையோர்ந்த வேதியர்கள் எவ்வாறுரைப்பார்கள்.—எ-று.

வேதங்களையோதியுணர்ந்தாலும் சிவபிரான் நிலைமை இத்தன்மைத் தென்றுணரமாட்டார்களென்பார், ''இவ்வுருக்கொடு திருப்பொருளிருப்ப தென்றுணராப்-பவ்வநான்மறையவைவலோரெங்ஙனம் பகர்வார்.'' என்றார். வேதமுதலியவோதியுணரினும் சிவபிரானிலைமையுணரலாகா தென்பதை,

"வேதசாத்திரமிருதி புராணகலைஞானம் விரும்பசபைவைகரியாதித் திறங்கண்மேலா-நாதமுடிவானவெல்லாம்பாசஞான நணுகியான்மாவிவைகீழ் நாடலாலே-காதலினுன் பிரமமென்னுஞானங் கருதுபசுஞானமிவனுடலிற் கட்டுண்-டோதியுணர்ந்தொன்றென்று வுணர்ந்திடலாற்பசுவா மொன்றாகச்சிவனியல் பினுணர்ந்திடுவன்காணே." என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தானுந்தெளிக. (கங)

அப்பொ ருட்குரு வுருவுகொண் டாணிழற் கதுவிச்
செப்ப வவ்வுரு முனிவர்நால் வருமுளந் தெளிந்தா
ரிப்ப டிக்கலாற் றேவருள் யாருமே யறியா
ரொப்பி லப்பொரு ளுருவுகொள் ளாதென வுரைப்பார்.

(இ-ள்.) அவ்வாறான பரம்பொருள் ஆசாரிய வடிவுகொண்டு கல்லாலின் னீழலிற்சேர்ந் துபதேசித்தமையின், அவ்வடிவம் இத்தன்மைத்தென்று சனகாதிமுனிவர் நால்வரும் மனத்தெளிவடைந்தார்கள். இவ்வாறல்லாமல் தேவர்கட்குள்ளே எவர்களும் அறியமாட்டாதவர்களாய், நிகரற்ற அப்பரம் பொருள் வடிவுகொள்ளாதென்று கூறுவர்.—எ-று.

அப்பரம்பொருளே ஆசாரியமூர்த்தமாய்க் கல்லாலின் கீழெழுந்தருளிச் சனகாதியர்க் குபதேசித்ததென்பதை, "கல்லாலின் புடையமர்ந்துநான்மறையாறங்கமுதற்கற்றகேள்வி வல்லார்களல்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப்பாலா-யெல்லாமா யல்லதுமாயிருந்ததனையிருந்தபடி யிருந்துகாட்டிச்-சொல்லாமற்சொன்னவரை நினையாமனினைந்துபவத் தொடக்கைவெல்வாம்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தாற் றெளிக. (கச)

அந்த மாத்தருக் கண்டருங் கதிவிதி யடையச்
சுந்த மாவிலிங் கப்பெயர் தாங்குசெஞ் சடையோன்
சிநதை யன்பினுற் புடவியிற் செறிந்தமா னவர்க
ணந்து வானவர் போற்றவீற் றிருக்குமந் நாளில்.

(இ-ள்.) அவ்வாறாகிய சிறந்த விருட்சத்தடியிற்றரிசித்து அருமையான முத்திப்பேற்றை முறைமையுடனடையும் வண்ணம், அழகிய மகாலிங்கம் என்னும் திருநாமம் வகித்துவீற்றிருக்கும் சிவந்தசடைமுடியையுடைய சிவபெருமான், மனதின்கணுதித்த மெய்யன்பினலே உலகத்தினிறைந்துள்ள மானிடர்களும் மேன்மைபெற்ற தேவர்களும் துதிக்கும்படி எழுந்தருளியிருக்கும் அக்காலத்தில் —எ-று.

இத்தலத்திலெழுந்தருளி யிருக்கும் மருதவாணருக்கு நந்தியெம்பெருமானிருக்குமிடம் திருவாவடுதுறையும், சோமாஸ்கந்தரிருக்குமிடம் திருவாரூரும். விநாயகக்கடவுளிருக்குமிடம் திருவாலங்குடியும், முருகக்கடவுளிருக்குமிடம் திருவலஞ்சுழியும் திருவேரகமும், சண்டேசரிருக்குமிடம் திருவாப்பாடியும், நடராஜப்பெருமானிருக்குமிடம் திருத்தில்லையும், வைரவக்

கடவுளிருக்குமிடம் சீர்காழியும், சூரியனிருக்குமிடம் திருமாந்துறையுமாக லின், இச்சிவலிங்கப்பெருமானுக்கு மகாலிங்கரென்னும் திருநாமமும், இத் தலங்கள் நாற்றிசையினும் சூழப்பெற்று மருதவிருட்சமுடைமையின் மரு தவனத்திற்குத் திருவிடைமருதூரென்னும் திருநாமமும் வழங்குகின்றன. இவற்றை, "அணிமருவு மிடைமருதீ சருக்கு நந்தி யாவடுதண் டுறைசோ மாக் கந்த ராரூர் - திணிபுகழா லங்குடியிற் குருமூர்த்தி யானைத் திருமுகத் தோன் வலஞ்சுழியே ரகத்திற்செவ்வேள் - கணிதருமாப் பாடியிற்சண்டீசன் றில்லைக் கதிர்ப்பொதுவினடக் கடவுள் வடுகன் காழி-பணிமருவு மாந்து றையினிரவி யாகும் பரமனெழிற் பதமலருக் கன்பு மிக்கீர்." எனவும், "பன்னகத்தனிப் பேருலகெங்கும்வேர் பரப்பித் - துன்னிமீதல மடங்கலு மூலவையாற் றூர்த்துப்-பொன்னிநாட்டொடங் ககருக்குத் தன்பெயர் பூட்டி- மன்னி நின்றிடு மொருமரு திறையவன் மருங்கு" எனவும், "மன்னு சீர்மரு திறையவன் கோயிலும் வகுத்தி - டன்ன தன்புற நாற்றிசை யாலய நான்கு- மின்னு செஞ்சடைக் கண்ணுதல் விமலன்றன் முகங்க - ளென்ன நூலறி புலவர்கள் புகலவுற் றிலங்கும்." எனவும்வரும் மருதவனப் புராணத்திரு விருத்தங்களானுந் தெளிக. (௧௫)

ஏக நாயக னாகிய வரனிரு திருத்தா
ளாக மூன்றுகா லங்களும் பூசைசெய் தருள்வோன்
மாக நாடரும் பணிசிவ மறையவன் வறியோன்
போக மாகவும் பூங்கதி புகுதவும் புகழ்வோன்.

(இ-ள்.) நிகரற்ற முதல்வராகிய சிவபிரானுடைய இரண்டு திருவடி களையும், முறைமையாகத் திரிகாலங்களினும் தவறாது வழிபடுகின்றவரும், தேவலோகத்தாரும் வணங்குதற்குரிய ஆதிசைவரும், நல்குரவினரும், போ கங்கள் விர்த்தியாகவும், சிறந்தமுத்தியிற் சேரவும் சிவபெருமானைத் துதிப் பவரும்.—எ-று.

சிவபூஜை செய்வோர் ஆன்மார்த்தம் பரார்த்தம் என்னும் இருவகைப் பூசைகளியற்றுவோரும், ஒவ்வொன்றையே தனித்தனி பூசிப்போரும் என மூவகைப்படுவர் இவர்களுள் தங்கடங்கள் வருணாச்சிரம தன்மத்திற்கேற் பத் தத்தம் ஆசாரியரிடத்துச் சிவலிங்கப்பெருமானெழுந்தருளப்பண்ணிக் கொண்டு பூசித்துவருவோர் ஆன்மார்த்த பூசையுடையோரெனவும், இவ் வான்மார்த்த பூசையுடனே திவ்யாலயங்களில் மூர்த்திகரித்தெழுந்தருளிய சுயம்புமுதலிய சிவலிங்கங்களையும் பூசிக்கத்தக்க மரபிலுதித்துப் பூசித்து வருவோர் ஆன்மார்த்த பரார்த்த பூசையுடையோரெனவும், அவ்வாறாகிய ஆதிசைவ மரபிலுதித்துப் பரார்த்தபூசை மாத்திரமியற்றி வருவோர் பரார் த்த பூசையுடையோரெனவுஞ் சொல்லப்படுவர். இம்மூவகுப்பினருள் மேற் கூறிய ஆதிசைவர் மருதவாணரையே இடைவிடாவன்புடனே பூசித்துவந்த பரார்த்த பூசையுடையோரென்று விளக்குவான், 'ஏகநாயகனாகியவரனிரு திருத்தா-ளாகமூன்றுகாலங்களும் பூசைசெய்தருள்வோன்." என்றும், ஆதி

சைவமரபினர் ஏனைய மரபினரைப்போன்று பிரமனுடைய முகம் தோள் துடை பாதம் என்னும் அவயவங்களிலுதியாது சிவபிரானுடைய திருமுகத் துதித்தோர் என்னும் பெருமிதத்தைத் தெளிவிப்பான், "மாகநாடரும் பணி சிவமறையவன்." என்றும், சிவபிரானிடத்திடையறாப் பத்திமையாற்றிரி காலங்களினும் பூசிப்போர்க்கு, அவ்வழிபாட்டைச் சிவாகமவிதி தவறாது நடாத்துதற்குச் செல்வம்வேண்டுதலானும், அவ்வாறு தமதாயுளுள்ளளவும் அச்செல்வத்தாற் சிவபிரான் வழிபாட்டிற் சிதைவின்றிச் செவ்வனே நடாத் தி வாரூன் முடிவில்வேண்டற்பாலது முத்தியாகலானும், இவ்விரண்டையும் விரும்பி அவ்வாதிசைவர் சிவபிரானைத் துதித்துவந்தனரென்பான், "போக மாகவும் பூங்கதிபுகுதவும் புகழ்வோன்." என்றும் கூறினர். (கசு)

மனைவி போயவன் றனிமையோன் மனங்கவன் றிருப்போ
னினிய மாமனை யாட்டியைப் பெறும்படி யெண்ணிப்
புனித நாதனைப் பூசனை முடிவினிற் போற்றிக்
கனக மீந்தரு டோகைபா காவெனக் கழறும்.

(இ-ள்.) (இன்னும் அவ்வாதிசைவர் எப்படிப்பட்டவரென்றால்) பத்தினியை இழந்தவரும், தனியாயிருப்பவரும், மனம்வருத்தமுற்றிருப்பவருமாகும். அவர் இனிமையுள்ள சிறந்தபத்தினியைப் பெறுவதற்காகச் சிந்தித்து, பரிசுத்தராகிய சிவபெருமானைத் தமது வழிபாட்டினிறுதியிற்றுதித்து, பார்வதிபாகரே! அடியேனெண்ணம் நிறைவேறுமாறு பொன்பணித்தருளவேண்டுமெனப் பிரார்த்திப்பார்.—எ-று.

கிருகஸ்தாச்சிரமத்தினின்று அக்கினிகார்யாதிகளை முடிப்போர் பத்தினி ஹீனராயிருக்கலாகாதென்பது நூற்றுணிபாகலானும், தாமெடுத்துக்கொண்ட சிவபூசை சிவனடியார் பூசையென்னும் இருவகைக்கும்வேண்டிய பரிசாரகத்தொழில்களை யியற்றத்தடை நேராதிருக்குமென்றெண்ணியும் பத்தினியைத் தேடத்தொடங்கியவழி, அப்பத்தினியைத் திருமணம் முடித்தற்கு இன்றியமையாக் கருவியாயிருப்பது பொருளேயாகலின், "கனகமீந்தருடோகைபாகா." எனப்பிரார்த்தித்தனரென்க. சிவபூசைசெய்து துதித்துப் பிரார்த்திப்போர்க்கே சிவபிரானருள் புரிவரென்னும் முறையைப்பற்றிச், சிவபூசை முடிவிற்றுதித்துப் பிரார்த்தித்தாரென்றனர். இதனை, "பூசைசெய்து தோத்திரஞ்சொலித் தனைநினை புண்ணியர் பாணணற் - காசை செய்திடு மம்பலக் கூத்தனையடைகிலை யடைந்தாரிற்-பேசுகின்றனையறவரின் விளங்கினை பிறர்மனை நயக்கின்றாய் - சீசி யிங்கிருந்தென் செய்தாய் நெஞ்சமே செத்திலாய் கெடுவாயே." என்னும் சாந்தலிங்க சுவாமிகள் திருவாக்கானுந் தெளிக. பொன்னே எவற்றிற்கும் முதற்காரணமாயிருந்து எவ்வகைப் பயனையு மெய்துறச் செய்தலினன்றோ தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும், "பொருளல்லவரைப் பொருளாகச் செய்யும்-பொருளல்லதில்லை பொருள்." எனத்திருவாய் மலர்ந்திருக்கின்றனர். (கஎ)

அன்பி னிற்பிரி யாதவள் பாகவென் றன்னோ
னன்பி னிற்பிரி யாவகை யநுதின மிரப்ப
வன்பி னிற்கன்ப னாகிய வமுதனா தலினா
லன்பு ருக்கொடு வருவதற் கிசைந்தன னருளால்.

(இ-ள்.) அன்பினாலே பிரியாதவராகிய உமாதேவியாரைப் பாகத்தி லுடையவரே யென்று, அவ்வாதிசைவமறையவர் தமது மெய்யன்பினால் இடைவிடாவண்ணம் தினந்தோறும் பிரார்த்தித்துக்கொண்டிருக்க, மெய்யடியாரன்புக்கன்புடைய அமுதேச்சுரரானமையின், திருவருளினாலே அவ்வடியாரிடத்துள்ள அன்பே திருமேனியாகக் கொண்டெழுந்தருளுவதற்குத் திருவுளங்கொண்டனர். —எ-று.

சிவபிரான் உமாதேவியாரிடத்துப் பிரியாத அன்புடையாரென்பதை, "தணந்தபெருந் துயர்க்கடன்மீக் கூர்தலினான் மலைபயந்த தரளமூரற்-கணங்குழையாள் புரிபூசை முடியளவுந் தரியாமலிடையே கம்பை-யணங்கினைத் தூதெனவிடுத்து வலிந்திறுகத் தழீஇக்கொள்ள வமையாக்காதன்-மணந்தருளிக் குறிபூண்ட வொருமாவிற் பெருமானை வணக்கஞ்செய்வாம்." என்னும் காஞ்சிபுராணத் திருவிருத்தத் தானுணர்க. பத்தினியை மணம் முடித்தற்குப் பொன்வேண்டுவோர், மழவிடையானே, மழுப்படையானே கரியுரியானே கறைக்களத்தானே என்றுபல்வேறாகத் துதியாது "அன்பினிற் பிரியாத வன்பாக." என்று துதித்ததெற்றுக்கெனின், தேவரீர் பத்தினியோடிருப்பது போன்றியானும் பத்தினியோடிருத்தல் வேண்டுமென்னும் குறிப்பும், அருளேசத்தியாகலின் அத்திருவருள் தமக்கு வேண்டுமென்னும் குறிப்பும் விளக்குவானென்க. இவ்வாறே சுந்தரமூர்த்தி சுவாமிகளும் குண்டையூர்க் கிழாரளித்த நெற்குவையைக் கொணர்ந்து பரவையார் மாளிகையிற் சேர்ப்பதற்காக ஆள்களைத் தரும்படி திருப்பதிகம் பாடியருளியபோது, பரவை நாச்சியாரின் வருத்தம் தேவரீரே யுணரத்தக்கவரென்று குறிப்பிப்பான், "பாதியோர் பெண்ணைவைத்தாய் படருஞ்சடைக் கங்கைவைத்தாய் - மாதர் நல்லார் வருத்தம்மது நீயுமறிதியன்றே, கோதில்பொழில் புடைசூழ்குண்டையூர்ச்சில நெல்லுப்பெற்றே-னாதியே யற்புதனே யலையட்டித்தரப்பணியே." எனத்திருவாய் மலர்ந்திருத்தலுங்காண்க. சிவபெருமான் அன்பருக்கன்பரும் அல்லார்க்கு வன்பருமாவரென்பதை, "ஒண்மையனே திருநீற்றையுத் தூளித்தொளிமிளிரும் - வெண்மையனே விட்டிடுதிகண்டாய் மெய்யடியவர்கட்-கண்மையனே யென்றுஞ் சேயாய் பிறர்க்கறிதற்கரிதாம் - பெண்மையனே தொன்மையாண்மையனே யலிப்பெற்றியனே." என்னும் மணிவாசகப் பிரான்மலர்வாக்கானும், அன்புக்கும் திருமேனிக்கும் அபேதமென்பதை, "அன்பு சிவமிரண்டென்பரறிவிலா - ரன்பே சிவமாவதியாருமறிகிலா - ரன்பே சிவமாவதியாரு மறிந்தபி - னன்பே சிவமாயமர்ந்திருந்தாரே." என்னும் திருமூலநாயனார் திருவாய் மலர்ந்தருளிய திருமந்திரத் திருவிருத்தத்தானுந் தெளிக. (கஅ)

அன்ன வேதியற் கருந்தன மளிப்பவுங் களிப்பா
லின்ன தீர்ந்த வெண் காடர்க்குக் கதியளித் திடவு
மன்னு பூவுல கத்துளோர் கண்டுவாழ் வுறவு
மென்னை யாளுடைப் பரம்பர னொருவடி வெடுத்தான்.

(இ-ள்.) அவ்வாதிசைவர்க்கு அருமையான ஐஸ்வரியத்தைப் பாலிக்கவும், மகிழ்ச்சியினாலே துயரமொழிந்த திருவெண்காட்டடிகட்கு முத்தியின்பத்தைப் பாலிக்கவும், நிலைபேறான நிலவுலகத்துள்ளார் தரிசித்து ஈடேறவும், என்னை அடிமையாகவுடைய சிவபெருமான் ஓர் திருவுருக்கொண்டருளினர்.—எ - று.

இவ்வாறு தம்மைப் பிரார்த்தித்த ஆதிசைவருக்குப் பொன்னருளவும், திருவெண்காட்டடிகட்கு முத்தியின்பம் பாலிக்கவும், இத்தகைய திருவிளையாடலைக்கண்டு தரிசித்தோர்களாகிய நிலவுலகத்தாரீடேறவும் திருவுளங்கொண்ட சிவபெருமான் ஓர்வடிவெடுத்தன ரென்றபடி. இவ்வண்ணம் பிரார்த்தித்த ஆதிசைவர் பெயர் சிவசருமரென்பதும் அவர் மனைவியார் பெயர் சுசீலையம்மையாரென்பதும் இவர்களிருவரும் இல்லறநடாத்திப் புத்திரப்பேற்றுக்காகத் தவம்புரிந்ததும், பவிஷ்யோத்தர புராணத்துள்ள திருவிடைமருதூர் மான்மியத்தைக்கூறும் வடமொழிப் புராணத்தில் விரிவாகக் கூறியிருப்பதாகக் கூறுவாருமுளர். (௧௧)

மருத வாணனென் றொருபெய ருலகெலாம் வழுத்தப்
பருவ மெண்ணிரண் டாண்டுடைப் பண்ணவ னாகிக்
கருதி னுங்கணிற் காண்பினுங் கேட்பினுங் கலந்தோ
ருருகு மன்பினன் றன்னைத்தா னருச்சனை யுவப்போன்.

(இ-ள்.) தியானிக்கினும் கண்களாற்றரிசிக்கினும் கேட்கினும் சிவகரணங் கலக்கப்பெற்றவ ருருகத்தக்க மெய்யன்புடையவரும் தம்மைத்தாமே பூசனைபுரிந்தோருமாகிய சிவபெருமான், தம்மை மருதவாணனென்னும் ஓர் திருநாமத்தால் உலகெங்கும் துதிக்கும்படி, பதினாறுவயதுடைய பிராமணச் சிறுவராய்த்தோன்றி—எ-று.

மனத்தினாற்றியானித்து, அத்தியானமுதிர்ச்சியாற் றரிசித்து, அத்தரிசனவுருவை மறவாதிருக்குமாறு, அப்பெருமான் புகழையே சதாசிரவணித்துக்கொண்டிருக்கும் மெய்யன்பினர்க்கன்புடையோன் சிவபெருமானாகலின், "கருதினுங்கணிற் காண்பினுங் கேட்பினுங் கலந்தோருருகுமன்பினன்." என்றும், திருவிடைமருதூரென்னுந் திருத்தலத்திற் சிவபெருமான் தம்மைத் தாமே பூசித்து அடியார் நம்மைப்பூசிக்கத்தக்க மார்க்கமிதுவாகுமென விளக்கித் தம்மைத்தாம் பூசித்தாரென்னும் திருநாமமும் வகித்தனராகலின், "தன்னைத்தானருச்சனை யுவப்போன்." என்றும், தம்மைப் பிரார்த்தித்துக்கொண்டிருந்த ஆதிசைவருக்குத் தாமே மகவாகத்தோன்றியபோது தமக்குத் திரு

நாமம் மருதவாணர் எனவழங்கச்செய்தனராகலின்,"மருதவாணனென்றொரு பெயருலகெலாம் வழுத்த." என்றுங்கூறினர். பெருமானை மனத்தினாற் றியானித்தலும், அவன் திருவுருவைக்கண்களாற் றரிசித்தலும், அவன் திருப்புகழைச் செவிகளாற் சிரவணித்தலும், அவன் திருவாலயத்தைக் கால்களால் வலம்வருதலும், அவனை வாயினாற்றுதித்தலும், அவனைக் கைகளாலருச்சித்தலுமே மெய்யன்பினர்க்கு முறைமையென்பதை, "நயன மிருண்டு போகாமுன் னடனப் பெருமான் றனைப்பாரார் - நடக்கும் பதங்க டளராமுன் னடவா ரமலன் றிருக்கோயில், பயனின் மொழிகள் குளறாமுன் பரம னடித்தா மரைதுதியார் பழுதில் செவிகள் செவிடாமுன் பரிந்து சிவன் மெய்ப்புகழ்கேளார், செயலி னெங்கை நடுங்காமுன் றிருமாமகளுங் கலைமகளுஞ்- செறியுந் திருவெங் கைக்கரசைச் செழுமென்மலர் கொண் டருச்சியார் மயலி லழுந்தி யயராமுன் மனத்தி லவனை யிருத்திடார் - மனித ருழன்று வாளாபோய் மறியா நரகின் மறிவாரே." என்னும் சிவப்பிரகாச சுவாமிகள் திருவாக்கானும், மருதூருடையார் தம்மைத்தாம் பூசித்தாரென்பதை, "ஓதுமர்ச்சனைசெய் தோனு முகந்தது கொண்டதேவும் - போதுறு கோதைவேற்கட் பொற்றொடி நாமே யாகு - மேதுவென்னம்மை நாமேயருச்சித்தற் கென்னிலிந்த-மாதவர் நமைப்பூசித்தன் மறந்த தீண்டறிதற் காமால்." என்னும் மருதவனப்புராணத் திருவிருத்தத்தானுந்தெளிக. (உ0)

எழுது மொண்கணக் கியாவையு மறிபவ னென்ன
மழுவி னங்கெழுத் தாணியாத் திரித்துவாண் மலர்க்கைப்
பழுதில் புத்தகத் தேடுநீ டேடெனப் பரித்து
மழகு துன்றிவன் யாவனென் றியாவரு மறிய.

(இ - ள்.) எழுதத்தக்க சிறந்த கணிதங்களனைத்து முணர்ந்தவர் போன்று தமது திருக்கரத்தேந்தியிருந்த மழுவையே விளக்கமுள்ள எழுத்தாணியாக மாற்றியும், ஒளியுள்ள தாமரைமலரொத்த திருக்கரத்துச் சிதை வில்லாத வேதபுஸ்தகத்தின் ஏட்டையே நீண்டபனை யோலையாகத் தாங்கியும், மிக்க சவுந்தரியமுடைய இவன் யாரென்று அனைவரும் பார்க்கும்படி:—எ - று.

விநாயகக்கடவுளும் பாரதமெழுதுங்கால் தமது தந்தத்தையே எழுத்தாணியாக்கிக்கொண்டு மேருவரையையே ஏடாகக்கொண்டாராகலின், ஈண்டும் சிவபெருமான் தமது மழுப்படையையே எழுத்தாணியாக்கித் தமது என்றும் புதிதாயிருக்கும் கைலையென்னும்வரையாகிய ஏடுகளுக்குள் ஓரேட்டையே நீண்ட ஓலையாகத் தாங்கினரென்று குறிப்பிப்பான், "பழுதில் புத்தகத்தேடு நீடேடெனப் பரித்து." என்றாரென்றுரைப்பாருமுளர். அங்ஙனங்கூறுதல் சிறப்பன்மைதெளிக. ஈண்டுகணிதங்களெவையு முணர்ந்தானைப்போன்று ஏடுமெழுத்தாணியுந் தாங்கிவந்தனரென்றுரைப்பினும் "ஒருமொழியொழி தன்னினங் கொளற்குரித்தே." என்னும் சூத்திரப்பிரகாரம் எழுத்துமுணர்ந்தவன்போன்று வந்தனனென்பதும் போதருதல் காண்க.

என்னை, "எண்ணுமெழுத்துங் கண்ணெனத்தகும்." என ஒளவைப்பிராட்டியாரும், "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங் - கண்ணென்ப வாழு முயிர்க்கு." எனத்திருவள்ளுவநாயனாரும் எண்ணையே முதன்மையாக எடுத்துவிதந்திருப்பதனாலறிக. அவ்வாறு வந்தகாலத்தும் அவலட்சணமுடையவனாகவும் அவமதிப்பேற்கத்தக்கவனாகவும் வாராது கண்டார் யாவரும் இவ்வழகினன் யாரோவென்றையுற்றுத் தமது தன்மையித்தகைத் தென்றொருவாறு பக்குவமுள்ளார் அறிந்துகொள்ளும்படி வந்தாரென்பார், "அழகுதன்றிவன் யாவனென்றியாவருமறிய." என்றனர். சிவபெருமான் தமது காருண்யத்தினாலிவ்வாறு வருதலியல்பென்பதை, 'பாடல் விஞ்சையனே வென்பார் பண்ணினாற் பாணிக் கேற - வாடல்விஞ் சையனே வென்பா ரும்பெறற் செல்வத் தாழ்ந்து - வாடிய மகனே வென்பா ரிசைபட வாழ்ந்து கெட்ட - வேடவிழ் தாரி னாருள் யார்மக னிவன்கொ லென்பார்." என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தானும்; சிவபெருமான் திருவேடங் கொள்ளும்போதெல்லாம் அவ்வவ்வேடங்கட் கேற்ற படையாக மழுவையே மாற்றிக்கொள்வதியல்பென்பதை, "அழுக்கடைந்த பழந்துணியொன் றரைக்கசைத்து விழுத்தொண்டர்-குழுக்கடந்த விண்டைநிகர் சுமையடைமேற் கூடைகவிழ்த் - தெழுக்கடந்து திசைகடந்திட்டினைகடந்த திருத்தோண்மேன் - மழுக்கடைந்து விளங்கியவாய் மண்டொடு திண்படையேந்தி.' என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. (உக)

பிட்டு வட்டவான் கடலிடைப் பிறந்தகா ரால
மிட்ட பிச்சைவேட் டுவன்றசை சேந்தனா ரீந்த
கட்டு மட்டவிழ் போலவெண் சோறுகைக் கொண்டு
முட்ட நின்றதாட் டாமரை பூமகள் முடிப்ப.

(இ-ள்.) பிட்டும், சூழ்ந்துள்ள சிறந்த சமுத்திரத்துதித்த கருநிறங்கொண்டஆலகாலமும், தாருகாவனத்திருடிமார் பத்தினிகளிட்ட பிச்சையும், கண்ணப்பனார் நிவேதித்த மான்றசையும், சேந்தநாயனார் படைத்த பத்திரப்படுத்திய களியும்போல, வெள்ளிய சாதத்தைக் கரத்திலேந்திக்கொண்டு, கீழுலகங்களையுழக்கும் முடிவிலுள்ள தமது திருவடித் தாமரைகளைப் பூதேவி சூடும்படி.—எ-று.

பிட்டையும் ஆலகாலத்தையும் தாருகாவனத்திருடிகள் பத்தினிமாரிட்ட பிச்சையையும் கண்ணப்பனார் நிவேதித்த மான்றசையையும், சேந்தநாயனார் படைத்த களியையும அமுது செய்தது போன்று, வெண்சோற்றையும் அமுதுசெய்தற்குத்திருவுளங்கொண்டாரொத்துக் கரத்தேந்தி வந்தனரென்றபடி. பிட்டையமுது செய்தனரென்பதை, "பிட்டுநேர்பட மண்சுமந்த பெருந்துறைப்பெரும் பித்தனே சட்டநேர்படவந்திலாதசழக்கனேனுனைச் சார்ந்திலேன் சிட்டனே சிவலோகனே சிறுநாயினுங் கடையாயவெங் - கட்டனேனையு மாட்கொள்வான்வந்து காட்டினாய் கழுக்குன்றிலே.' எனவும், ஆலகா

லம் அமுதுசெய்ததை, "கோலால மாகிக் குரைகடல்வா யன்றெழுந்த - வா லால முண்டா னவன்சதுர்தா னென்னேடி - யாலால முண்டிலனே லன் றயன்மா லுள்ளிட்ட - மேலாய தேவரெலாம் வீடுவர்காண் சாழலோ." என வும்வரும் மணிவாசகப்பிரான் மலர்வாக்குகளானும், தாருகாவனத் திருடி மார்களிட்ட பிச்சையேற்றதை, "செச்சை மலர்புரை வாஞேடு மேனிதிறந்து கொண்டு - கச்சை யரவொன் றசைத்துக் கபாலங் கரத்தெடுத்துப் - பச்சை மயிலனை யார்மனை தோறும் படர்ந்திரக்கும் - பிச்சை யொழிகென் ஞெரு வார்த்தை சொல்லெம் பெரியம்மையே." என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கானும், கண்ணப்பநாயனுரிட்ட இறைச்சியை யேற்றனரென்பதை, "பூசனைசெய்யுங் குனிசிலைவேடன் - குணமவையாவண வுரிமையிற்சிறந்த - நன்மாதவனென் றுணரவனுகர் - தியங்கிய விடமுனிவனமதுவேயவன்-செ ருப்படியாவண விருப்புறு துவலே * * * * யவனுகர்ந்திட்ட விறைச்சியெ னக்குநன் - மாதவரிட்டநெய்பாலவியே." என்னும், நக்கீரரருளிய திருக் கண்ணப்பதேவர் திருமறத்தானும், சேந்தநாயனுர் நிவேதித்த களியை யேற் றதை, "அவிழ்ந்த துணியி லவிழ்ந்த வமுதை-யவிழ்ந்த மனத்தோ டளித்த-தவிழ்ந்தசடை - வேந்தனுர்க் கின்னமுத மாயிற்றே மெய்ப்பத்திச் - சேந்த னுர் செய்த திறம்." என்னும் உமாபதிசிவாசாரியார் திருவாக்கானும் தெளிக. எனவே மேற்கூறியவற்றை அடியார் மெய்யன்புக்காக விழைந்தது போன்று சிவசருமரது மெய்யன்புக்காகத் திருவமுது செய்ய விழைந்தாற் போல வெண்சோற்றைக் கரத்தேந்தி வந்தனரென்க, சிவபிரான் திருவடிகள் கீழு லகங்களேழினுக்கும் அப்பாற்பட்ட வென்பதை, "கீதமினியகுயிலேகேட்டி யேயெங்கள்பெருமான் - பாதமிரண்டும் வினவிற்பாதாளமேழினுக்கப்பாற் - சோதிமணிமுடிசொல்லிற் சொல்லிறந்து நின்றதொன்மை-யாதிகுணமொன் றுமில்லானந்தமிலான் வரக்கூவாய்." என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக் கானுந்தெளிக. (உஉ)

வந்து நம்பிவா ழிடமத னிடைப்புக்கு மிக்க
கந்த மார்படுக் கையுறு கண்ணியன் கனிவா
விந்த வாரமு துண்டிடச் சுவைக்கறி யீக
வந்த ணுளவென் றறைதலும் பூசுர னறைவான்.

(இ - ள்.) இவ்வாறன கோலத்துடனெழுந்தருளி, சிவசருமர் வசிக் கின்ற அவ்விடத்தடைந்து, விசேடித்த மணமுள்ள கொன்றைமலர் மாலிகை யுடைய சிவபெருமானுகிய வேதியச்சிறுவர், ஓமறையவரே! இரக்கமாக எனது கரத்தினிறைந்திருக்கும் இவ்வமுதைப் புசிப்பதற்கு அறுசுவையோடுங்கூடிய கறிகள் தருவீரென்று திருவாய்மலர்ந்தவளவில், சிவசருமரென்னும் வேதியர் விளம்புவார்.—எ-று.

அறுசுவையோடு கூடியதே உண்டியாகலின், வெறுஞ்சாதம் புசிக்க விசையாதார்போன்று கடித்து, "இந்தவாரமுதுண்டிடச் சுவைக்கறியீக" என்றனர். இதனை, "முறியலாப்புழுக்கண முட்பழங்கலந்த - வறுசுவையடி

சிலட்டினிதிருப்ப." என்னும் திருவெண்காட்டடிகள் திருவாக்கானும் தெளிக. (௨௩)

அறுசு வைக்கறி யமுதுநின் வாக்கினு லறிந்தே
னறுமை மேவிய சிறுவகே ளெனவிடை நவின்று
னிறைவ னங்கையி லன்னமங் கோரிடத் திருத்தி
யுறையு மில்லற நங்கையெங் கேயென வுரைத்தான்.

(இ-ள்.) நன்மை மேவிய சிறுவனே! கேட்பாய், அறுசுவைகளோடு கூடிய கறிவகைகள் சேர்ந்த அமுதென்பதை உன்னுடைய வார்த்தையினு லறிந்தேன் என்று சிவசருமர் விடைகூறினர். அதைக்கேட்டவளவில் சிவபெருமானுகிய பிராமணச்சிறுவர், தமது அழகிய திருக்கரத்துள்ள சாதத்தை அவ்வீட்டிலுள்ள ஓரிடத்திலே வைத்து, உம்முடன் வசிக்கின்ற இல்லறக் கிழத்தி எவ்விடத்துள்ளாளென்று வினவினர்.—எ-று.

சவுந்தரியமும் யௌவனமும் சற்குணமும் பிரமசரியாச்சிரம ஒழுக்கமும் மேம்பட்டு விளங்குகின்றமையின், "நறுமைமேவிய சிறுவ." என்றனரென்றும், அச்சிவசருமர் வறுமை மேலீட்டால் தண்ணீருஞ் சாதமுமேனும் பசிநோய் வருத்தாதருந்த வேலாதவராகையால், "அறுசுவைக் கறியமுது நின்வாக்கினு லறிந்தேம்." என்றனரென்றும் கூறினர். (௨௪)

பொன்னு லாவிய செஞ்சடைப் புராதனன் புகல
வன்ன வேதிய னியம்புவா னமருமில் லறத்தாண்
மன்னு நாயக னுலகுளா ளென்றுரை வழுத்த
வின்னும் வேறொரு கன்னியை மணஞ்செய்வீ ரென்றான்.

(இ - ள்.) பொன்னினொளி பரவிய சிவந்த சடைமுடியுடைய பழையோராகிய சிவபெருமானுகும் பிராமணச்சிறுவர் இவ்வாறு திருவாய்மலர்தலும், அச்சிவசருமரென்னும் வேதியர் கூறுவாராய், என்னுல் விரும்பப்படும் எனது மனைவி, நிலைபேறுன நமது தலைவராகிய சிவபெருமானுடைய உலகத்திலிருக்கின்றனளென்று கூற, அதுகேட்ட வேதியச்சிறுவராகிய சிவபெருமான், மீண்டும் மற்றொரு கன்னிகையைத் திருமணம் முடிப்பீராகவெனத் திருவாய்மலர்ந்தனர்—எ - று.

தமது மனைவி கற்பின் மேம்பட்டவளாய்த் தன் சொற்படி நடந்து வந்த தன்மையை விளக்கும்பொருட்டும், அத்தகையளைத் தாமின்னும் மறவாமல் விருப்புற்றிருக்கின்றமையை யுணர்த்தும்பொருட்டும், "அமர்ந்தவில்லறத்தாள்." என இறந்தகாலத்திற் கூருது, "அமருமில்லறத்தாள்." என முக்காலத்திற்கும் பொருளாம்படி கூறினர். கற்பின் மேம்பட்ட காதலிமாரிறந்தபோது, அவர்கள் கற்பைக் கருதிக் கருதிக் காதலர் வருந்துவரென்பதை, "அடிசிற் கினியாளே யன்புடை யாளே - படிசொற் றவறாத பாவா - யடிவருடிப் - பின்றூங்கி முன்னெழுந்த பேதையே போதியோ - வென்

றாங்கு மென்க ணிரா,, எனத்திருவள்ளுவர் திருவாய்மலர்ந்தமையானுந் தெளிக. (௨௫)

வேறு மிங்கொரு கன்னியை வேட்பதற் கன்றோ
பேறு காண்கிலேன் வறுமையென் பேறெனப் பெற்றே
னாற ணிந்தவர் திருவுள மின்னதென் றறியேன்
றேறு மன்னவர் நினைப்பரேற் றிருவெலாஞ் சேரும்.

(இ-ள்) மீண்டும் இவ்விடத்தில் ஓர் கன்னிகையை மணம் புரிவதற்குச் செல்வம் கண்டேனில்லை, ஐயோ! தரித்திரமே எனது வாய்ப்பாகப் பெற்றிருக்கின்றேன், கங்கைநதியணிந்த கடவுளின் திருவுளச்செயலிது வென்றுணரேன், யாவராலும் தெளிதற்குரியாராகிய அப்பெருமான் திருவுளங்கொள்வாராயின் ஐஸ்வரியங்களனைத்தும் அடையும்.—எ-று.

ஐஸ்வரிய சம்பந்தமுடையோன் ஈச்சுரனாகையானும், அவ்வாறான ஈச்சுரனென்னும் திருநாமம் சிவபிரானுக்கே யுரித்தாகலானும், "அன்னவர் நினைப்பரேற் றிருவெலாஞ் சேரும்." என்றார். சிவபிரானுக்கே ஈச்சுரனென்னும் திருநாமமுரித்தென்பதை, 'குன்றலரு மருளாள னென்றமொழி நிற்குநீக் கொண்டுசெல் கின்ற தெனவுங்-குறித்தொருவர் பாலென்ற வளவிலம் மொழிசென்று கோவமுதி னேர்த லெனவு, நன்றினிய பழமென்ற வளவி னெட்டிலைவாழை நற்கனியி னெய்த லெனவு - நாடரும் பிள்ளையென் கின்றமொழி யாண்மகவி னண்ணுமா றெனவு மீச, னென்றளவின் விடமெழுந் திடநடுங்கிநிலை யின்றியிரி தருதேவரை - யெய்தாமன் மணிகண்டனைப்பொருந்துதலெனவு மிவணகர மென்பதுதனைச், சென்றடையு மொரு பெருங் கச்சிநக ராளிநீ சிறுதே ருருட்டி யருளே - சிவசமய குலதிலக சிவஞான மாமுனிவ சிறுதே ருருட்டி யருளே" என்னும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கானுந் தெளிக. (௨௬)

என்ற வாய்மொழி கேட்டலு மெழுதிளங் காளை
நின்று தாய்தம ரொன்றிலே னிகழுமெப் பொழுது
மொன்று லோகத்திற் றொழிலெலாம் வல்லமை யுடையே
னென்றனைக்கொடு விற்றுநீர் வறுமைதீர்ந் திடுவீர்.

(இ-ள்.) என்று கூறிய அச்சிவசருமருடைய வார்த்தையைக்கேட்டவளவில், இளமையான காளைப்பருவமுடைய பிராமணச்சிறுவராகிய சிவபெருமான் இருக்கைவிட்டு எழுந்து நின்று, நான் மாதாவும் மற்றுள்ள உறவினரும் இல்லாதவன், உலகத்தில் நடக்கின்ற எக்காலத்தினும் பொருத்தமான தொழில்களெவற்றினும் ஆற்றலுள்ளேன், ஆதலால் என்னைக்கொண்டு போய் விற்று நீர் உமது வறுமைப்பிணி யொழிவீராக.—எ-று.

சிவபிரான் தாய் தமரற்றவராதலுண்மையாகலின், இப்போது பிராமணச் சிறுவர்போன்றிருப்பவர், ''தாய்தமரொன்றிலேன்.'' என்றும், சிவ

பிரான், ஏனைய தேவர்கள்போலாது எல்லாம் வல்லசித்தரா யெழுந்தருளி னமையானும், அளவிலாற்றலுடைமை என்னும் குணமுடையராகலானும், "நிகழுமெப்பொழுது மொன்றுலோகத்திற் றெழிலெலாம் வல்லமையுடையேன்." என்றும் கூறினர். சிவபிரான் தாய்தமரற்றவரென்பதை, "கோயில் சுடுகாடு கொல்புலித்தோ னல்லாடை - தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடி - தாயுமிலி தந்தையிலி தான்றனிய னாயிடினும் - காயி லுலகனைத் துங் கற்பொடிகாண் சாழலோ." என்னும் மணிவாசகப்பிரான் மலர்வாக்கானும், எல்லாம்வல்ல சித்தரானுரென்பதை, "செல்லார் பொழில்சூழ் மதுராபுரிச் சித்தரெல்லாம் - வல்லாரவ ராடலை யாருரை செய்யவல்லா - ரெல்லாரும் வியப்புறவித் தனிச்சித்தசாமி - கல்லானை தின்னக் கரும்பீந்த கதையுஞ் சொல்வாம்." என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. (உஎ)

சொற்று ளேனெனப் பூசுர னினைவுளந் துளங்கிக்
கற்ற கல்வியான் மேல்வரு வனமனங் கருதி
யிற்றை நாளுனை விற்பனேல் விளைவதிங் கென்னோ
பற்றிலே னின்ன காரியம் பழுதெனப் பகர்ந்தான்.

(இ - ள்.) இவ்வாறு நானே கூறினேனென்று கூற, அவ்வார்த்தை கேட்ட சிவசருமர் தம்முடைய எண்ணமும் மனமும் நடுக்கமுற்றவராய், மிக முயன்று கற்ற கல்வியை யுடையவராகிய அம்மறையவர் இனிமேல் விளைய வேண்டியவற்றைத் தமதுளத்திற் சிந்தித்து, இன்றையத்தினத்தில் உன்னை யான் விற்பேனுயின் இவ்விடத்தில் எனக்குண்டாவது யாதோ? இக்காரியம் குறைவுடையது. ஆதலால் நான் இதைச் செய்ய உடன்படேனென்று கூறினர் —எ - று.

சிந்தனையும் சிந்தையும் தனித்தனி வெவ்வேறாகவும், அவ்வொவ்வொன்றும் ஒன்றுக்கொன்றியை புடைத்தாகவுமிருத்தலின், "நினைவுளந்துளங்கி." என்றும், கற்றார் மேல்வருவனவற்றை யாராய்ந்தே ஓர் காரியத்தைச் செய்யத் துணிவார்களாகலின், "கற்ற கல்வியான் மேல்வருவன மனங்கருதி." என்றும், அத்தகையினர் ஓர் காரியம் பழுதெனத்தோன்றின், அக்காரியத்தில் மனம் பற்றார்களாகலின், 'பற்றிலே னின்னகாரியம் பழுதெனப் பகர்ந்தான்." என்றும் கூறினர். சிந்தைவேறு சிந்தனைவேறென்பதை, "செல்வமென்பது சிந்தையி னிறைவே." என்னும் திருவெண்காட்டடிகள் திருவாக்கானும், கற்றார் மேல்வருவனவற்றை யாராய்ந்தே ஓர்காரிய மியற்றுவரென்பதை, "எண்ணித் துணிக கருமந் துணிந்தபி-னெண்ணுவ மென்பதிழுக்கு." என்றும், பழுதெனத் தோன்றிய காரியத்தில் மனம்பற்றாரென்பதை, "ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை - யூக்கா ரறிவுடை யார்." என்றும் வரும் திருக்குறள்களானும் தெளிக. (உஅ)

பழு தடைந்திடிற் பரிகரித் திடலுமென் பார
முழுதும் வல்லவ னெவ்விடத் தியாவையு முடிப்பா

னெழுது மாவணம் மீங்கிவற் குண்டென விசைத்தாற்
றெழுதி நீதியாய் முடிவுறு மிவ்வணந் துணிவே.

(இ-ள்.) குற்றம் நேருமாயின் அதை நிவாரணிப்பது எனது பாரம், எல்லாம் வல்லவனாகி எவ்விடத்திலும் எவற்றையும் நிறைவேற்றுவன். இவனுக்கு எழுதிக்கொடுத்த ஆவணமென்னும் அடிமைச்சீட்டும் உண்டு என்றுரைத்தால், உன்செயல்களெல்லாம் நீதியாகவே முற்றுப்பெறும் இவ்வாறு நிச்சயிப்பாயாக என்றனர்.—எ-று.

தொழுதி - கூட்டம். இவன் எவ்வாறான தொழில்களினும் வல்லபமுடையவனாய் எவ்விடங்களினும் எவற்றையும் நிறைவேற்றுவன், இவன் எனக்கெழுதிக்கொடுத்த அடிமைச்சீட்டும் உண்டு என்றுரைத்தால், உன்செயல்கள் யாவையும் நீதியானவையே என்று பிறரால் மதிக்கப்பட்டு முடிவு பெறும். அவ்வாறு குற்றம் நேரின் யானே நிவாரணிப்பேனென்றனர் பிராமணச் சிறுவராகிய சிவபிரான் என்றவாறாயிற்று. ஆவணம் அடிமைச்சீட்டென்பதை, "ஆட்சியி லாவணத்தி லன்றிமற் றயலார் தங்கள் - காட்சியின் மூன்றிலொன்று காட்டுவா யென்ன முன்னே - மூட்சியிற் கிழித்தவோலை படியோலை மூலவோலை - மாட்சியிற் காட்டவைத்தே னென்றனன் மாயை வல்லான்." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானு மறிக. (௨-௯)

நீதி யன்றிது சிறுவநீ நிரப்பிய வார்த்தை
வேதி யர்க்குழா மாசரா ளேவலோர் வினவிற்
றீது செய்குவார் வைகுவார் சிறுநகை செறிப்பா
ராத லாலிவை தவிர்தலே யறனென வறைந்தான்.

(இ-ள்.) சிறுவனே நீ கூறிய இம்மொழிகள் நீதியானவைகளல்ல, பிராமணத்தொகுதியரும், அரசர்களுடைய பரிசனர்களும் ஏவலாளர்களும் இச்செய்தியைக் கேட்பார்களாகில், கெடுதிசெய்வார்கள் வைவார்கள் புன்னகைகூர்வார்கள், ஆகையால் இச்செய்கைகளை விட்டுவிடுதலே தருமமாமென்று சிவசருமர் கூறினர்.—எ-று.

நம்மோடொத்த மரபினர்களாகிய மறையவர்கள் இச்செய்தியைக் கேட்கின், மறையவர்க்கு மறையவர் அடிமையாதலெங்குள்ள வழக்கென்று வைவார்கள், மன்னனுடைய பரிசனர்கள் கேட்கின், இதை அரசனுக்குத் தெரிவித்துத் தண்டிப்பார்கள், ஒழிந்த நம்மரபினர்க்கு ஏவலாளர்களாகிய மற்றையர்கள் கேட்கின் இழிவாகக்கூறி நகைப்பார்கள், ஆகலின் இச்செய்கையை விடுதலே நீதியென்றனரென்றபடி - என்னை, இச்செய்கையை நால்வருணத்தினரும் பழிப்பார்களென்பதாம். மறையவர்க்கு மறையவர் அடிமையாதலில்லையென்பதை, "மாசிலா மரபில் வந்த வள்ளல்வே தியனை நோக்கி-நேசமுன் கிடந்த சிந்தை நெகிழ்ச்சியாற் சிரிப்பு நீங்கி-யாசிலந் தணர்கள்வேறோரந்தணர்க் கடிமை யாதல் - பேசவின் றுன்னைக் கேட்டோம் பித்தனோ மறையோ னென்றார்." என்னும் அருண்மொழித்தேவர் அமுதவாக்கானும் அறிக.

நால்வருணத்தவரையுங் குறிப்பான். "வேதியர்க்குழா மரசராளேவலோர்." என்றனரென்க. (௫௦)

அஞ்ச லையநீர் விலைக்குற விற்பதே யழகா
லெஞ்ச லில்பொருடருவதற் கிசைந்தியா னிசைத்தேன்
வஞ்ச மில்லதோர் புண்ணிய மென்னுழி வருமாற்
செஞ்சொ லாமெனப் புண்ணியன் றேற்றிடத் தெளிந்தான்.

(இ-ள்.) ஐயரே நீர் அச்சமுறாதேயும், என்னைத்தக்க விலைக்காக விற்பதே அழகாகும், உமக்குக் குறைவற்றபொருள்களைச் சம்பாதித்துக்கொடுப்பதற்கொருப்பட்டு இவ்வார்த்தைகள் யான் கூறினேன், இதனால் வஞ்சகமற்றதாகிய ஒப்பற்றபுண்ணியம் எனக்குண்டாகும், இது நிச்சயமான வார்த்தையாகுமென்று புண்ணியச்சொரூபராகிய பிராமணச் சிறுவராயிருக்கும் சிவபிரான் மீண்டும் சிவசருமர் மனத்தைத்தேற்றுதலால் அவர்தெளிவடைந்தனர்.—எ - று

இவ்வாறு செய்வதனால் உமதெண்ணம் நிறைவேறலேயன்றி எனக்கும் புண்ணியம் உண்டாகும் இது நிச்சயமான வார்த்தையாகும் என்றவளவில், மேலும் மறுத்துரைக்க மனமில்லாராய்ச் சிவசருமரிசைந்தன ரென்றபடி, எனவே, புண்ணியச்செயலால் தமக்குச்சிறப்பும் செல்வமும் வருமெனக்கருதி அறிவுடையோர் அச்செயலைக் கைவிடாரென்பது கருத்து. இதனானன்றே, "சிறப்பீனுஞ் செல்வமு மீனு மறத்தினூஉங் - காக்கமெவனோ வுயிர்க்கு" எனத்தெய்வப்புலமைத் திருவள்ளுவரும் திருவாய்மலர்ந்தனர். (௫௧)

தெளிந்த பூசுர னாவணப் பழம்படித் தீட்டி
விளங்க நல்கினோன் றனைக்கொடு கோயிலுண் மேவி
வளங்கொ ளாதனை விடைகொண்டு பூம்புகார் மருவக்
களங்க மொன்றிலான் படர்ந்தனன் காவத மநேகம்.

(இ - ள்.) இவ்வாறு தெளிந்த சிவசருமரென்னும் வேதியர், அடிமைச்சீட்டைப் பழமையுடைத்தாய் விளங்குமாறு எழுதிக்கொடுத்த அப்பிராமணச் சிறுவரைத் தம்முடனழைத்துக்கொண்டு, திருவிடைமருதூ ராலயத்தினுட்சென்று, அங்கெழுந்தருளியிருக்கும் மாட்சிமையுடைய சிவபிரானிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, காவிரிப்பூம்பட்டினத்தை யடைவதற்காக, யாதோர் களங்கமுமற்றவராகிய அவர் அநேககாத வழிதூரம் வந்தனர்—எ - று.

சிலவருடங்கட்கு முன்னரே எழுதிக்கொடுத்த அடிமைச் சீட்டாகப் பார்ப்பவர்க்குத் தோன்றும்படி எழுதிக்கொடுத்தாரென்று குறிப்பிப்பான், "ஆவணம்பழம்படத்தீட்டி." என்றும், தாம் செய்யும் ஒவ்வோர் செய்கையையும் சிவபிரானிடத்தில் விண்ணப்பித்து அவரனுஞைபெற்றேசெய்வார் சிவசருமரென்பதை விளக்குவான்,"கோயிலுண்மேவி வளங்கொளாதனை விடை

கொண்டு." என்றும், திருவிடைமருதூர்க்கும் காவிரிப்பூம்பட்டினத்திற்கும் இடையில் அநேககாதவழி தூரம் உள்ளதென்பதை யுணர்த்துவான், "பூம்புகார்மருவப்படர்ந்தனன்காவதமநேகம்." என்றும் கூறினர். சிவபிரானிடத்து மெய்யன்புள்ளோர் அவரனுஞையின்றி யாதோர் காரியமுமியற்றாரென்பதை, "வேதவேள்வியை நிந்தனைசெய்துழ - லாதமில்லி யமணொடுதேரரை - வாதில்வென்றழிக்கத் திருவுள்ளமோ - பாதிமாதுடனாய பரமனே - ஞாலநின்புகழேமிகவேண்டுந்தென் - னாலவா யிலுறையுமெம்மாதியே." என்னும் திருஞானசம்பந்தசுவாமிகள் திருவாக்கானுமறிக. (௩உ)

சுந்த ரப்பெரு மாணயி னார்க்குமுன் சுடர்ப்பொன்
றந்த வள்ளியோ னவர்குலத் தலைவரா மொருவர்க்
குய்ந்திடப்படிக் காசளித் தவனிவ ருடன்போய்
நந்த லில்லவாந் தமனிய மீகுவா னடந்தான்.

(இ - ள்.) சுந்தரமூர்த்திசுவாமிகளுக்கு விளக்கமுள்ள பொன்னையே முற்காலத்திற் பாலித்துவந்த வள்ளலாரும், அச்சுந்தர மூர்த்திகளுடைய வேதியகுலத்தலைவராகிய திருஞானசம்பந்த மூர்த்திகளுக்குப் பஞ்சத்திலுயிர்வாழும்படிக் காசளித்தவருமாகிய சிவபெருமான், இச்சிவசருமருடனே இவருக்குக் குறைவற்ற பொன்னைச்சம்பாதித்துக் கொடுப்பதற்காகப் பின்சென்றருளினர்.—எ - று.

சுந்தரமூர்த்திசுவாமிகட்குப் பொன்னீந்தமை, "சுற்றுமிருந்த தொண்டர்களுந் துயிலுமளவிற் றுணைமலர்க்கண் - பற்றுந்துயினீங் கிடப்பள்ளியுணர்ந்தார் பரவைகேள்வனர் - வெற்றிவிடையா ரருளாலே வேமண்கல்லே விரிசுடர்ச்செம்-பொற்றிண் கனக மாக்கண்டு புகலூரிறைவ ரருள்போற்றி." எனவும், "பனிமதிச் சடையார் தாமும் பன்னிரண் டாயிரம் பொன்-னனியருள் கொடுக்கு மாற்ற னல்கிட வுடைய நம்பி - தனிவரு மகிழ்ச்சி பொங்கத்தாழ்ந்தெழுந்-தருகு சென்று - கனிவிட மிடற்றி னார்முன் பின்னென்று கழறலுற்றார்." எனவும், திருஞானசம்பந்த சுவாமிகட்குப் படிக்காசளித்தமையை, "தம்பிரா னருள்புரிந்து கனவினீங்கச் சண்பையா ரிளவேறு தாமுணர்ந்து - நம்பிரா னருளிருந்த வண்ணமென்றே நாவினிசை யரசரொடுங் கூடநண்ணி-வம்புலா மலரிதழி வீழிநாதர் மணிக்கோயில் வலஞ்செய்யப் புகுந்தவேலை-யம்பிகா பதியருளாற் பிள்ளையார்தா மபிமுகத்துப் பீடிகைமேற் காசுகண்டார்." என்வும்வரும் அருண்மொழித்தேவ ரமுதவாக்குகளானுமறிக. (௩௩)

சங்க வான்றமிழ் மதுரையிற் பாணனர் தமக்குத்
துங்க மாகிய வாளென விந்தனஞ் சுமந்தா
ரிங்கு மாங்கவர் போன்றவ ராட்கொள்வா னெண்ணி
யங்க மாருயிர் யாவையு மடிமையா வுடையார்.

(இ - ள்.) சங்கப்புலவர்களுடைய சிறந்த தமிழ் நிறைந்த மதுரைமாநகரத்திலே பாணபத்திரருக்குப் பரிசுத்தமாகிய அடிமையென்று விறகுசுமந்

தருளிய சிவபெருமான், இவ்விடத்திலும் அப்பாணபத்திரரைப்போன்ற அன்புடையராகிய திருவெண்காட்டடிகளை ஆட்கொள்வதற்காகத் திருவுளங்கொண்டு, தமது திருமேனியும் சிறந்த உயிரும் ஆகிய அனைத்தும் அடிமையாதலையுடையவராயினர்.—எ - று.

எனவே பாணபத்திரரின் அடிமையென்று விறகுசுமந்து வந்தவர், அவர்போன்ற மெய்யன்புடையவராகிய திருவெண்காட்டடிகளை யாட்கொள்வதற்காகத் தாமவர்க்கடிமையாதற்கு வந்தார் என்றபடி. பாணபத்திரர்க்கடிமையாளென்று விறகேற்றுவந்ததை, "சிந்தை தோயுமைம் பொறிகளுஞ் செவிகளாப் புலன்க - ளைந்து மோசையா விசைவலா னிருந்தன னாகப் - பந்த நான்மறை நாவினாற் பத்திர னாளாய் - வந்து பாடினா ரிந்தனச் சுமையொடு மறைந்தார்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானும், மெய்யன்புடையாரை யடிமைகொள்வதற் கிவ்வாறே தாம் பற்பல வாடல்களாற்றுவதியல்பென்பதை, "செங்கண்மா றடக்கையிற் சங்க நாண - முட்டாட் டாமரை முறுக்கவிழ் மலர்மேல் - வலம்புரிகிடக்கும்வாதவூரன்ப - பாடும் பணிநீ கூடும் பொருட்டு - மதுரைமா நகரிற் குதிரை மாறியும்-விண்புகழ் முடிமிசை மண்பொறை சுமந்து - நீற்றெழின் மேனியின் மாற்றடிபட்டு-நின்னைத் தொண்ட னென்னக் கொண்டன - னிருக்கு மடுக்க லரக்க னெடுப்ப - முலைபொர வரைபொரு மொய்ம்பின் - மலைமக டழுவ மனமகிழ்வோனே." என்னும் நால்வர் நான்மணிமாலையானு முணர்க. (௫௪)

புக்கு ளாரிலர் புகாரெனும் பட்டினம் புடைபோய்
மிக்க நீதியால் வாழ்வணி கேசர்தம் வீதிப்
பக்க மேவிலை பகர்ந்தனர் பகரலும் பரிவாற்
செக்க ரஞ்சடை முடியவ ரடியவர் தெரிந்தார்.

(இ-ள்.) இவ்வாறு சென்ற இருவரும் காவிரிப்பூம் பட்டினத்தினுள்ளே பிரவேசியாதவர்களாய், அதன் பக்கத்திற்சென்று மிகுந்த ஒழுக்கத்துடன் வாழ்கின்ற வைசியத்தலைவர்களுடைய வீதியில் மாத்திரமே விலைகூறினர். அவ்வாறு கூறுதலும், அன்பினாலே செவ்வானத்தின் அழகுள்ள சடைமுடியினராகிய சிவபிரானுக்கடியவரான திருவெண்காட்டடிகள் அறிந்தனர்.எ - று.

பட்டினத்தினுள்ளே பிரவேசித்தால் முதலிலுள்ளது அரசர் வீதியாகலின் ஆங்குச் செல்லாவண்ணம் தடுத்து, தமதடியராகிய திருவெண்காட்டடிகளுள்ள வைசியவீதியிலே விலை கூறும்படி பிராமணச்சிறுவராய் வந்த சிவபெருமான் சிவசருமரைத் திருப்பினரென்றபடி. (௫௫)

மறைய வன்றனை யிறைய வன்றனை வரவழைத்துக்
குறையு றுதவெண் காடர்முற் காரணக் குறியா
லுறையு மீங்கிவ ணிடத்ததி சயமென்கொ லுரையீர்
நறையு லாவிய விடைமரு துடையநா யகரே.

(இ - ள்.) அவ்வாறுணர்ந்த யாதோர் குறைவுமற்ற திருவெண்காட்டடிகள், முன்னே தமக்குத் தோன்றிய ஓர்காரணத்தின் குறிப்பால் வேதியராகிய சிவசருமரையும் சிவபெருமானாகிய பிராமணச்சிறுவரையும் விளித்து, நன்மணங்கமழும் சோலைகள்சூழ்ந்த திருவிடைமருதூரையுடைய தலைவரே! இவ்விடத்திருக்கும் இச்சிறுவனிடத்து ஆச்சரியம்யாது கூறுவீரென்றனர்.—எ-று.

அச்சிறுவரைப் பார்த்தவளவில் தமக்குத்தோற்றிய ஓர் குறிப்பினால் இச்சிறுவர் சிவபிரானே யெனவுணர்ந்தாரெனக் குறிப்பிப்பான், "முற்காரணக்குறியால் உறையுமீங்கிவன் நறையுலாவிய மருதுடைய நாயகரே" எனச்சொற்போக்காற் சிலேடைப்பொருள் பயத்தலுங்காண்க. (நசு)

இயம்பு மம்மொழிக் கெதிர்மொழி யிவர்சொலா முன்னர்
நயம்பு ணர்ந்தவா ளாயவ னலங்கொள நவில்வான்
வயங்கு நன்மணி யாவையும் விலைநிலை மதிப்பே
னியங்கு பற்பல தொழிற்குமீங் கெனக்குநே ரெவரே.

(இ - ள்.) அவ்வாறுரைத்த திருவெண்காட்டடிகளின் வார்த்தைக்குத் தாம் சிவசருமர் கூறுதற்குமுன்பே, நன்மைபொருந்திய அடிமையாக வந்த சிறுவர் இனிமைதரும்படி யுரைப்பாராய், விளங்குகின்ற இரத்தினங்களெவற்றையும் நிலைமையான விலையாக மதிப்பிடுவேன், இதுவல்லாமலும் இவ்வுலகத்தினடக்கின்ற பலவகைப்பட்ட தொழில்களில் இவ்விடத்தில் எனக்கொப்பானவர்கள் யாவர்.—எ - று.

இத்திருவெண்காடர் அநேகவகை வியாபாரங்கள் புரிந்தாரேனும், அவற்றுண்மேம்பட்டது இரத்தின வியாபாரமே யாகலானும், அவ்விரத்தினங்களைச் செவ்வனே மதிப்பிடுவோரே அவர்க்கவசியம் வேண்டுமாகலானும், சிவசருமர்வேறெவற்றையேனும் முதலிற்கூறின், திருவெண்காட்டடிகட்குத் தம்மேன் மனம்பற்றுதென்றுணர்ந்து, அவர்மறுமொழியுரைப்பதற்கு முன்னம்தாமே தமது வல்லபத்தைக்கூறுவாராய், "வயங்குநன் மணியாவையும் விலைநிலைமதிப்பேன்." என்றும், அன்றியும் தம்மை யடிமையாகக் கொள்ளின் வேறெவ்வகைத் தொழிற்கும் மற்றோரடிமை வேண்டியதின்றென்றுணர்த்துவான், "இயங்கு பற்பலதொழிற்கு மீங்கெனக்கு நேரெவரே." என்றும் கூறினர். (நஎ)

எனுமவன்றனை மகிழ்ச்சியா னோக்கியொப் பிடஞ்சேர்
வனம ருமணி விலைமதிப் புறுகது மதித்தா
லனைய வன்சொன்ன தொக்குமென் றருமணி யளித்தார்
புனித வாண்மணி மதித்தனன் பின்னரும் புகல்வான்.

(இ-ள்.) என்றுகூறிய அச்சிறுவனைத் திருவெண்காட்டடிகள் களிப்பினாற்பார்த்து, எவ்விடத்திலுள்ள நீருதத ஓர் இரத்தினமயாவாலும் விலை

மதிக்கத்தகாததா யிருக்கின்றது, அதனை இவ்வளவுபெறுமென்று விலைமதிப்பிடுவோனுயின், அச்சிறுவருரைத்தது சரியாமென்று, தம்மிடத்திருந்த அவ்வருமையான இரத்தினத்தை எடுத்துக்கொடுத்தனர். உடனே அச்சிறுவர் பரிசுத்தமானதாய் விளக்கமுள்ள அவ்விரத்தினத்தை மதித்தவராய் மீண்டும் கூறுகின்றனர்.—எ-று

இரத்தினங்களுள் நீரோட்டம் நிறைந்திருப்பதே மிகச்சிறந்ததாகலானும், அதனை மதித்தலே எவர்க்கு மேலா தாகலானும், வனமருமணிவிலை மதிப்புறுதது." என்றும், "அருமணி." என்றும், 'புனிதவாண்மணி," என்றும், அம்மணியை மதித்ததனேடுங்கூட அவ்வகை மணிகளின் இலக்கணங்களையும் விரிவாகக்கூறத்தொடங்கினரென்பான், "பின்னரும் புகல்வான்." என்றுக்கூறினர். (௩௫)

நவம ணிக்கண விலக்கண மியாவையு நவில்வேன்
கவலு நெஞ்சிலாத் தலைவர்நீ ரன்னவை காணத்
தவமி யற்றினீர் முன்னரே திருவெலாந் தழைப்பப்
பவம கற்றவும் பெற்றுளீ ரறிவெனப் பகர்வான்.

(இ-ள்.) நவரத்தினத் தொகுதியின் இலக்கணங்களெவற்றையும் கூறுவேன். வருந்தலில்லாதமனமுடைய தலைவராகிய நீர், அவைகளையுணரும் பொருட்டே, முற்பிறவியிலேயே ஐஸ்வரியங்கள் யாவும் விர்த்தியாகுமாறு தவம் புரிந்துள்ளீர், பிறவியை ஒழிப்பதற்கேற்ற மெய்யறிவையும் பெற்றிருக்கின்றீரென்றுரைப்பாராயினர்.—எ-று.

சஞ்சலசித்தமுடையவர்களாயின் அவர்கட்கெவ்வித விலக்கணமுரைப்பினும் பயன்படாவென்பதையுணர்த்துவான், "கவலுநெஞ்சிலாத் தலைவர்நீர்." என்றும், அத்தகைய இரத்தினவிலக்கணங்களை நிதிக்குவை யுடையோரே யுணரவேண்டுதலின், 'அன்னவைகாணத்தவமியற்றினீர்முன்னரே திருவெலாந் தழைப்ப, "என்றும், இத்தகைய பெருநிதியம் வாய்த்தும் இச்செல்வச்செருக்கால் மதிமாழாந்து பிறவிக்கேதுவாகிய அஞ்ஞானமுடையராகாமல்,இவற்றின் பற்றை அறவேயொழித்துப் பிறவிபோக்கத்தக்க மெய்யறிவுமடைந்துள்ளீர் என்பார், "பவமகற்றவும் பெற்றுளீரறிவு," என்றும்கூறினர் கவலுநெஞ்சிலா என்பதற்கு விரும்பும் மனமில்லாத எனப்பொருள் கூறினுமாம். (௩௬)

வேறு.

பார்க்கவ முனிவன் சொன்ன படிவலா சுரன்ற வங்கள்
சீர்க்கவே செய்யச் செய்யச் சிவனவன் முன்னர்த் தோன்றி
வேர்க்கின்ற தவங்க ணன்று வேண்டிய தென்னை யென்னத்
தார்க்கொன்றை மௌலி யானை வணங்குபு சாற்று கின்றான்.

(இ-ள்.) பார்க்கவமுனிவருபதேசித்தவாறு வலனென்னும் அசுரன் சிறப்போடுகூடிய தவங்களை மேன்மேலு மியற்றிக்கொண்டிருக்க, சிவபெரு

மான் அவ்வவுணனுக்குப் பிரசன்னராகி, நீ வருந்தி முயன்றியற்றிய தவங்கள் சிறந்தனவே, உனக்கு வேண்டிய வரம் யாதென்று திருவாய்மலர்ந்தருளலும், அவ்வவுணன் கொன்றைமாலையணிந்த திருமுடியையுடைய சிவபிரானைப் பணிந்துரைக்கின்றனன். —எ-று.

வலனென்னும் அவுணன் பார்க்கவமுனிவரை நோக்கிச் சிவபிரானிடத்தில் வரம்பெறுதற்குரிய தவங்களெவ்வாறியற்றுவதோ, அவற்றை யடியேனுக் கனுக்கிரகிக்கவேண்டுமெனக் குறையிரந்தனன். அக்குறையைத் திருவுளமேற்ற பார்க்கவமுனிவர், அவ்வவுணனுக்குச் சிவபிரானை நோக்கித் தவஞ்செய்தற்குரிய மார்க்கங்களை நன்கு விளக்கியருளினரென்னுஞ் சரிதத்தைக் குறிப்பிப்பான், "பார்க்கவமுனிவன் சொன்னபடி வலாசுரன்றவங்கள் - சீர்க்கவே செய்ய." என்றும். அவுணர்கள் கொடுமையுடையோராகலின் அவர்கட்குச் சிவபிரான் அதிசீக்கிரத்தில் அனுக்கிரகிப்பதில்லையென்று விளக்குவான். "செய்யச்செய்ய." என்றிரட்டித்தும், அத்தகைய தவங்களால் அவ்வவுணன் மேனி வாடியிருந்ததனால், "வேர்க்கின்ற தவங்கள்." என்றும் கூறினர். (௪0)

என்னுடை வடிவ மெல்லா மினமணி வடிவ மாக
நின்னது கருணை யாலே யருள்கென நிமல னீந்து
முன்னரே மறைந்த பின்னர் முனைவலா சுர னும் போந்து
பன்னரு மகவான் யாகப் பசுவெனத் தயாவின் வந்தான்.

(இ - ள்.) அடியேனிறப்பேனுயின் எனது சரீரமுழுவதும் நவரத்தினத்தொகுதியின் வடிவமாகும்படி, தேவரீருடைய கிருபையினுற் பாலிப்பீராக என்று பிரார்த்திக்க, அவ்வாறே சிவபிரான் வரம்பாலித்து அவ்வவுணனுக்கெதிரிலேயே கரந்தருளியபிறகு, போரில்வல்ல வலனென்னும் அவ்வவுணன் அங்கு நின்றும் பெயர்ந்து, சொல்லுதற்கரிய இந்திரனியற்றும் யாகத்திற்குரிய பசுவாகத் தயவுடனே உருவெடுத்துவந்தனன்.—எ-று

வலனென்னும் அசுரன் சிவபிரானை நோக்கித் தவம்புரிந்து, அவரைத் தரிசித்தவளவில், அப்பெருமான் உனக்குயாது வரம் வேண்டுமெனத் திருவாய்மலர்ந்தபோது, அசுரன் பெருமானை நோக்கி, சுவாமி! அடியேன் யுத்தத்தில் எவராலும் பிளக்கப்பட்டு இறவாத வரம் பாலிப்பீர், ஒருக்காலிறந்தாலும், எனது சரீரம் என்னைக்கொன்ற சுத்தவீரரும் விரும்பத்தக்க நவமணிகளாகும் வரத்தையும் பாலிப்பீரென்று பிரார்த்தித்தனன். அப்பிரார்த்தனைக்கிரங்கிய பெருமான் அவ்வாறே வரம்பாலித்தனர். அவ்வரங்களைப் பெற்றுக்கொண்ட அசுரன், தேவேந்திரனிடத்திற் போர்க்குச்சென்று யுத்தம்புரிந்தனன். அவனுடன் யுத்தம்புரிந்து தோல்வியுற்ற இந்திரன் இவ்வசுரன் சிவபெருமானிடத்தில் வரம்பெற்ரேருனகையால், இவனை யுத்தத்தில் வெல்வது அரிது, தந்திரத்தினுற் கொல்லவேண்டுமென்று சிந்தித்து, சைனியங்கள் படைகள் என்னும் ஒன்றுமின்றித் தனியனுயிருந்து, அவ்வசுரனை நோக்கி, நினது யுத்தத்தை நான் மிகவும் வியந்தேன், உன்னை யுத்தத்தில்வெல்ல ஒரு

வராலும் முடியாது, உனக்கு வேண்டிய வரம் யாதோ அதனைக் கேட்பாயெ ன்றனன். அவ்வார்த்தை கேட்ட அசுரன் உடல் குலுங்க நகைத்து, அழிவ ற்றவராகிய சிவபிரானிடத்தில் வேண்டிய வரத்தைப்பெற்றுக்கொண்ட யான் உன்னிடத்திற் பெறத்தக்கது யாதிருக்கின்றது என இழித்துக்கூறி உன க்கு வேண்டிய வரங்கேள் யான் தருகிறேனென்றனன். அப்போது இந்தி ரன் அவனை நோக்கி, நான் திருக்கைலைக்குச்சென்று அவ்விடத்திற் செய்யப் போகும் ஓர் யாகத்திற்குத் தேவர்களுக்கு அவியூட்டுவதற்காக நீ யாகப்பசு வாய் வரவேண்டுமென்றனன். வலனென்னும் அசுரன் அதுகேட்டவளவில், அவ்வாறு யான் செய்வேனாயின், முன்பு முதுகந்தண்டொன்றை வச்சிரா யுதமாகக்கொடுத்த ததீசிமுனிவரடைந்த புகழுடம்பைப்போன்று வெற்றி யடைந்த புகழுடம்பொன்றுடனே எனதுடலமுழுவதும் நவமணிகளாகும் புகழுடம்பொன்றும் கூடி இரண்டு புகழுடம்புக ளடைவேனென்று துணி ந்து, நீ எனக்குப் பகைவனல்லன் உறவனேயாகும் என்று கூறி அவ்வாறே செய்தற்கொருப்பட்டு, பசுவடிவெடுத்து வந்து யாகசாலையைக் கிட்டினன், என்பது சரிதமாகலின், அச்சரிதத்தை இச்செய்யுளிற் சுருக்கிக் கூறினர். ()

வந்தவப் பசுவைப் பற்றி வச்சிரா யுதத்தி னாலே
யுய்ந்திட வரிந்து கொண்ட வுறுப்பினை விண்ணோ ருண்ண
வெந்தவவ் வுறுப்புத் தப்பி வீழ்ந்தன வித்தாய் மண்மேற்
சிந்துவிற் பொருப்பிற் றீவிற் சிறந்தநாட் டினிற் பரந்தே

(இ - ள்.) அவ்வாறு வந்த பசுவைப்பிடித்து இந்திரன் தனது வச்சிரா யுதத்தினாலே அறுத்து அதன் அவயவங்களைத் தேவர்கட்கவியாகக்கொடுக்க, யாகத்தீயில் வெந்த அப்பசுவின் அவயவங்களிற் சிதறியவை பூமியில் விழுந் தன. அவைகளே விதைகளாய்ப் பூமியின் மேலும் கடலிலும் மலைகளிலும் தீவுகளிலும் சிறப்புற்ற நாடுகளிலும் பரவி —எ-று.

அப்பசுவைச் சேதித்துத் தேவர்களுக்கவியா யூட்டியபோது சிதறிய சிறு துண்டுகளாகிய அப்பசுவின் அவயவங்களே நவரத்தினங்கட்கு வித்தாய் கடல் மலை நாடு என்னும் இவ்விடங்களிற் பரவினவென்றபடி. எனவே நிலத்திற் சிந்திய சிலவற்றை மலைபடு திரவியங்கொள்வோர் பண்டமாற்று கப்பெற்றமையின் ஆண்டும், அவ்வண்ணமே கடல்படுதிரவியங்கொள்வோர் பண்டமாற்றாகப் பெற்றமையின் ஆண்டும், நாடுகளில் வணிகர்கள் வியாபா ரஞ் செய்தற்கேற்றமையின் ஆண்டும் பரவினவென் றவாறாயிற்று. இச்சரித் திர விரிவைத் திருவிளையாடற்புராணம் மாணிக்கம்விற்ற படலத்திற்காண்க.

விளைந்தன மணிக ளாக விண்ணவர் மண்ணோர் பூண்பார்
வளம்படு வெற்றி வீர வலாசுர னுடல மொன்பான்
களங்கமின் மணிக ளாயும் புனிதமே காண்மி னென்ன
விளங்குல குபகா ரத்தால் வீந்தனன் புநித மாக.

(இ - ள்.) நவரத்தினங்களாக உற்பத்தியான அவற்றைத் தேவர்களும் மானிடர்களும் அணிவார்கள். வளம்பாடுற்ற வெற்றியடைந்த வீரனாகிய வலாசுரனுடைய சரீரம் ஒன்பதுவகைப்படும் குற்றமற்ற இரத்தினங்களாகியும் பரிசுத்தமானவைகளே பார்ப்போர்களாகவென்று, விளக்கமமைந்த உலகோபகாரமாகவே பரிசுத்தமாக இறந்தனன்.— எ - று.

அசுரனது சரீரமாகிய நவமணிகளென எவர்களும் இகழாமலே தேவர்களும் மனிதர்களும் தரித்துக்கொள்கின்றார்கள். அவ்வசுரனும் தான் உயிரோடிருக்குமளவும் ஒருவராலும் வெற்றிகொள்ளற்கேலாத வீரனாகவும், இறக்கும்போதும் யாவராலும் பூசித்தற்குரிய யாகப்பசுவின் சரீரத்துடனும் இறந்தமையின், அசுரத்தன்மையென்னும் அசுத்தம் நீங்கப்பெற்றுப் பரிசுத்தனுதற்பொருட்டே இவ்வாறியற்றின னென்றவாறாயிற்று. என்னை, அவ்வசுரவுருவத்துட னிருக்கினும் வீரனென்றுமாத்திரம் பெயர்கொள்ளுவானேயொழிய யாவரும் மதிக்கத்தக்க புகழுடையான், அவ்வுருவத்துடனிறந்து அவனது சரீரம் நவமணிகளாயினும் அசுரசரீரோற்பத்தியென்றே யாவரும் இகழ்ந்தணியார்களாகலினென்க. (௬௩)

மன்றுளே யாடு மெங்கண் மாணிக்கக் கூத்த னார்க்கு
நன்றிசெய் வார மேழு நவமணி விழாவிற் பூண்பா
ரென்றிடிற் சங்கை யிங்கே னிவை தரிப் பவர்க்கு வென்றி
யொன்றிய வீரஞ் செல்வ மோங்கு மென் றுரைக்கு நூலே.

(இ - ள்.) பொன்னம்பலத்திலே ஆனந்தத்தாண்டவம்புரியும் எங்கள் நடராஜப்பெருமானுக்கு, திருவிழாக்காலத்தில் நன்மைமிக்க எழுவாரங்களிலும், நவரத்தினங்களையே தரிப்பார்களென்றுரைப்போமாயின், இவ்வுலகத்திற் சந்தேகங்கொள்ளவேண்டிய தெற்றுக்கு, இந்நவமணிகளையணிவோர்க்கு, வெற்றிபொருந்திய வீரமும்செல்வமும் விசேடிக்குமென்று நூல்கள் முறையிடுகின்றன.—எ-று.

இந்நவமணிகளும் பரிசுத்தமானவை யென்பதற்குப் பொன்னம்பலத்திற்றாண்டவம்புரியும் புனிதனார்க்கே யணிவார்களாயின் இதுபற்றிச் சந்தேகிப்பதேனென்றபடி. (௬௪)

மலரணி மாலை மேலா மணியணி வண்ண மாலை
விலைமணித் தார்க டம்மின் மாணிக்க மாலை மேலாம்
பலமென வாக மத்தும் பகர்தரு மாத லானு
மிலகிய மணிக டேவர் யாவரும் பூண லாமே.

(இ - ள்.) அன்றியும், அழகிய மலர்மாலைக்கு மேம்பட்ட பயனுடையது அழகிய நிறமுள்ள இரத்தினமாலையாகும், விலையேறப்பெற்ற அவ்வித இரத்தினமாலைகளுக்குள்ளே மாணிக்கமாலை மேம்பட்ட பயனுடையதாகுமென்று சிவாகமங்களினும் கூறப்படுமாகலானும், விளக்கமுள்ள நவமணிகளைத்தேவர்களும் மற்றை எவர்களும் தரிக்கலாகும்.—எ - று.

சிவாகமங்கள் சிவபிரானுக்குத் தரிக்கத்தக்க மாலைகளின் சிறப்புரைக்கவந்தவிடத்து, சாதாரண மான மலர்மாலைகளினும் இரத்தினமாலை மேம்பா

ற்றபலனுடைத் தென்றும், அவ்விரத்தினமாலைகளுள்ளும் மாணிக்கமாலை அதிமேம்பாடான பலனுடைத்தென்றும் விதித்திருத்தலின், அந்நவமணிகளைத் தேவர்மாநுடர் முதலிய யாவரும் தரிக்கலாமென்றபடி. (௬௫)

ஞாயிறு மாணிக் கங்கோ மேதகந் திங்க ளாரம்
வாய்வயி டூரி யஞ்செவ் வாய்வளப் பவள மாகு
மேயவன் புதனிற் பச்சை வியாழமாம் புட்ப ராகங்
காய்கதிர் வெள்ளி வச்ரங் கடுஞ்சனி நீலங் காணே.

(இ - ள்.) ஆதிவாரத்தில் மாணிக்கமணியும், சோமவாரத்தில் கோமேதகமணியும், மங்களவாரத்தில் முத்தமணியும் இலக்கணம் வாய்ந்த வைடூரியமணியும், வல்லமையுற்ற புதவாரத்தில் வளப்பமுள்ள பவளமணியும், குருவாரத்தில் பச்சைமணியும் புட்பராகமணியும், காய்கின்ற கிரணத்தினையுடைய சுக்கிரவாரத்தில் வைரமணியும், கொடிய சனிவாரத்தில் நீலமணியும் ஆராயத்தகுமென்று நீ யறிவாயாக.—எ - று.

இரண்டாவதுரை:—ஆதிவாரத்தில் மாணிக்கமணியும், கோமேதகமணியும், சோமவாரத்தில் முத்தமணியும் இலக்கணம் வாய்ந்த வைடூரியமணியும், மங்களவாரத்தில் வளப்பமுள்ள பவளமணியும், வல்லபம் பொருந்திய புதவாரத்தில் மரகதமணியும், தகுதியாகிய குருவாரத்தில் புட்பராகமணியும், காய்கின்ற கிரணத்தினையுடைய சுக்கிரவாரத்தில் வைரமணியும், கொடிய சனிவாரத்தில் நீலமணியும், ஆராயத்தக்கவையென்று நீ அறிவாயாக, எ-று.

இவ்வாறுன வாரங்களில் மேற்படி நவமணிகளை ஆராயவேண்டுமென்பதனை, "இனையவை யளந்து கண்டு மதிக்குநாளெழுமான் பொற்றேர்-முனைவனுண் முதலா வேழின் முறையினுற் பதும ராகங்-கனைகதிர் முத்தந் துப்புக் காருடம் புருட ராகம்-புனையொழி வயிர நீல மென்மனுர் புலமை சான்றோர்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுமறிக. (௬௬)

பசுவென்பு வயிரம் பல்லு பனிமுத்தங் குருதி யோதில்
வசையறு திருமா ணிக்க மயிர்வயி டூரி யங்கண்
டசைபவ ளங்க ணீலந் தரும்பிச்சு பச்சை மெச்சு
நிசகபம் புட்ப ராக நிணங்கோமே தகமென் றூமே.

(இ - ள்.) அவ்யாகப்பசுவின் எலும்பு வயிரமணியும், பற்கள் குளிர்ந்த முத்தமணியும். உதிரத்தைச் சொல்லுமிடத்தில் பழிப்பற்ற அழகுடைய மாணிக்கமணியும், மயிர் வைடூரிய மணிகளும், தசை பவளமணியும், கண் நீலமணியும், பெருகும் பித்தம் மரகதமணியும், மெச்சத்தக்க உண்மையான கபம் புட்பராகமணியும், நிணம் கோமேதகமணியும் ஆகும்.—எ - று.

அவ்யாகப் பசுவின் உறுப்புக்களனைத்தும் இவ்வாறு நவமணிகளாயினவென்பதை, "அத்தகை யாவின் சோரி மாணிக்க மாம்பன் முத்தம்-பித்தைவைடூ யமென்பு வச்சிரம் பித்தம் பச்சை-நெய்த்தவெண் ணிணங்கோ மேதந் தசைதுகிர் நெடுங்க ணீல-மெய்த்தவை புருட ராக மிவைநவ மணியின்றோற்றம்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுமறிக. (௬௭)

வயிரமுத் தந்த ணளன் மாணிக்கம் பவளம் வேந்த
னயமலி புட்ப ராக நல்லகோ மேத நீதி
வயவயி டூர்ய மூன்றும் வாழ்வுறு வணிக னுரு
மியலுடை நீலம் பச்சை யிரண்டுஞ்சூத் திரனு மன்றே.

(இ - ள்.) வயிரமணியும் முத்தமணியும் பிராமணசாதியும், மாணிக்க மணியும் பவளமணியும் க்ஷத்திரிய சாதியும், நன்மைமிக்க புட்பராகமணியும் சிறந்த கோமேதகமணியும் ஒழுங்குவாய்ந்த வைடூரியமணியும் ஆகக்கூடிய மூன்றுமணிகளும் வைசியசாதியும், இலக்கணமுள்ள நீலமணியும் மரகதமணியும் ஆகிய இரண்டுமணிகளும் சூத்திரசாதியுமாகும்—எ - று.

நவமணிகள் இவ்வாறு நான்கு வருணங்களையுடைத்தென்பதை, "முன்னவ ரென்ப கற்றோர் வச்சிர முந்நீர் முத்த-மன்னவ ரென்ப துப்பு மாணிக்கம் வணிக ரென்ப-மின்னவிர் புருட ராகம் வைடூயம் வெயிற்கோ மேதம் - பின்னவ ரென்ப நீல மரகதம் பெற்ற சாதி." என்னும் திருவிளையாடற் புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. (௪௮)

படிகமஞ் சனக்கற் கூட்டிப் பதினொரு மணியாச் சொல்ப
முடிவுறு மிம்ம ணிக்கு முக்குணப் பிரிவுஞ் சொல்வாம்
வடிவுறு படிக முத்து வைத்தசாத் துவிக மாமால்
விடுதுகிர் மாணிக் கங்கோ மேதக மிராச தம்மே.

(இ - ள்.) படிகமணியையும் அஞ்சனக்கல் என்னும் மணியையும் சேர்த்துப் பதினொருமணிகளென்றும் கூறுவார்கள். இனி முடிவாகிய இந்நவ மணிகட்கு மூன்றுகுணங்களின் பிரிவையும் கூறுவாம். அழகமைந்த படிக மணியும் முத்தமணியும் முதன்மையாக வைத்துள்ள சாத்வீக குணமாகும், ஒளிவிடுகின்ற பவளமணியும் மாணிக்கமணியும் கோமேதகமணியும் இராசத குணமாகும்.—எ-று.

பெரும்பாலோர் நவமணிகளே யென்றுரைப்பினும் சிறுபான்மையோர் படிகமணியையும் அஞ்சனக்கல்லையும் அவ்வொன்பது மணிகளுடன் சேர்த்து ஏகாதசமணிகளென்றிசைப்பர். என்னை, படிகமணி பிரகாசமுடைத்தாய்ச் செபவடங்கட்கு முபயோகப்படுதலானும், அஞ்சனக்கல்லும் அவ்வாறே ஒளியுடைத்தாய் ஔடதங்கட் குபயோகப்படுதலானும் போலும். (௪௯)

அஞ்சனக் கல்லு நீல மாலுந்தா மதம தாகு
மெஞ்சில்சாத் துவிகத் தோடு மிராசதங் கலத்தல் வச்ர
மஞ்சுறு புட்ப ராக மணிவயி டூர்ய மாகுந்
தஞ்சரா சதங்க லந்த சாத்விகம் பச்சை யாமே.

(இ - ள்.) அஞ்சனக்கல்லென்னும் மணியும் நீலமணியும் மாறுபடுகின்ற தாமதகுணமாகும், குறைதலில்லாத சாத்வீககுணத்துடனே இராசத குணங் கலந்திருத்தல் வைரமணியும், அழகுற்ற புட்பராகமணியும் வைடூரிய மணியுமாகும், பெருமையுற்ற இராசதகுணங்கலந்த சாத்வீக குணத்தையுடையது மரகதமணியாகும்.—எ - று.

இந்நவமணிகட்கும் மூக்குணங்களுண்டென்பதை, "பார்த்திவர் மதிக்கு முத்தம் பளிங்கன்றிப் பச்சை தானுஞ் - சாத்திகர் துகிர்மாணிக்கங் கோமேதந் தாமேயன்றி - மாத்திகல் புருடராகம் வைடூர்யம் வயிரந்தாமு - மேத்திரா சதமாநீலந் தாமத மென்ப ராய்ந்தோர்." என்னும் திருவிளையாடற்புராணத் திருவிருத்தத்தானுந் தெளிக. (௫௦)

நவமணி யர்ச்சித் தற்கு நறுமலர்ப் புனைதல் சொல்வாந்
தவழின்மா ணிக்கத் திற்குத் தாமரைப் பூத்த ரிக்க
வுவகையா முத்துக் கோது மொண்சிறு செண்ப கப்பூ
கவைபடு பவளம் பார்க்கிற் கமழுஞ்செவ் வல்லிப் பூவே.

(இ-ள்.) இந்நவமணிகளையும் பூசிப்பதற்காக நன்மணமுள்ள மலர்களை அலங்கரிக்குமாறு கூறுகின்றோம். பழுதற்ற மாணிக்கமணிக்குத் தாமரை மலரும், களிப்பையுண்டாக்குகின்ற முத்தமணிக்குச்சொல்லுகின்ற ஒளியுள்ள சிறுசெண்பகமலரும், பிளவுபடுகின்ற பவளமணிக்குப் பார்க்குமிடத்து, மணம்வீசுகின்ற செவ்வல்லிமலருமாகும்.—எ - று.

நவமணிகளும் பூசித்தற்குரித்தென்பதும், அவற்றுளொவ்வொன்றற்கும் இன்னின்னமலர்களுரித்தென்பதும் விளக்குவே னென்பார், "நவமணி யர்ச்சித்தற்கு நறுமலர்ப்புனைதல் சொல்வாம்." என்றனர். (௫௧)

மரகதங் காந்தட் புட்ப ராகமல் லிகைப்பூ வச்ர
நுரை தரு நீரிற் பூத்த நூறிதழ்த் தாம ரைப்பூ
கருநீலங் கருவி ளங்கோ மேதகங் கமழுங் காவி
திரைவயி டூரி யப்பூத் தேம்படு வெண்மந் தாரம்.

(இ-ள்.) மரகதமணிக்குக் காந்தண்மலரும், புட்பராகமணிக்கு மல்லிகை மலரும், வைரமணிக்கு நுரைகளைத்தருகின்ற சலத்தில்மலர்ந்த நூறிதழ்களையுடைய தாமரைமலரும், கருமையான நீலமணிக்குக் கருவிளமலரும், கோமேதகமணிக்கு மணம்வீசும் கருங்குவளைமலரும், திரையினையுடைய வைடூரியமணிக்குத் தேன்நிரம்பிய வெண்மந்தாரமலருமாம்.—எ - று.

நவமணிகளைப் பூசித்தற்கிவைகளே மலர்களென்பதை. "அல்லியம் பதுமஞ், சாதி யரத்தவா யாம்பல் கோடல் - வல்லிமேசர் மௌவற் போது நூற்றிதழ் மரைகள் வாய - மெல்லிதழ்ச் சுழுநீர் பேழ்வாய் வெள்ளைமந் தார மின்ன - சொல்லிய முறையால் வண்டு சூழத்தம் முடிமேற்சூடி." என அம்மணிகளைப் பூசிப்போரணியத் தகுவனவாய்க்கூறிய திருவிளையாடற்புராணத்திருவிருத்தத்தானுந் தெளிக. எனவே, அம்மணிகட்கணியத்தக்கவையும் அவைபூசிப்போர் அணியத்தக்கவையும் அம்மலர்களே யாமென்றவாறாயிற்று.

தூயநன் னிலத்தி லொத்த சுத்தப் டத்தை வைத்து
மேயவப் பீட மீது வெண்படாம் விரித்து வைத்துப்

